# "சங்க இலக்கியத்தில் பரணர் பாடல்கள் - ஓர் ஆய்வு"

ஆய்வியல் நிறைஞர் (எம்.ஃபில்) பட்டத்திற்காகப்
பெரியார் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப் பெற்ற ஆய்வேடு


**ஆய்வாளர்**

**க.தேவி,** எம்.ஏ.,
பதிவு எண்: 03CAN1012





தமிழ்த்துறை
அரசு கலைக்கல்லூரி
சேலம் - 636 007



பெரியார் பல்கலைக்கழகம்

சேலம் - 636 011

**சனவரி - 2005**

**க.தேவி, எம்.ஏ.,**
முழு நேர ஆய்வியல் நிறைஞர்,
தமிழ்த்துறை,
அரசு கலைக்கல்லூரி,
சேலம் - 7.

# ஆய்வாளர் உறுதிமொழி

**"சங்க இலக்கியத்தில் பரணர் பாடல்கள் - ஓர்ஆய்வு"** என்னும் தலைப்பில் முழுநேர ஆய்வியல் நிறைஞர் (எம்.ஃபில்) பட்டத்திற்காக, சேலம் - 7, அரசு கலைக்கல்லூரித் தமிழ் இணைப்பேராசிரியர் முனைவர் துரை. ஜெகநாதன், எம்.ஏ., (தமிழ்); எம்.ஏ., (ஆங்கிலம்); டிப்.எட்.; செர்ட்.லிங்.; பிஎச்.டி., அவர்களின் மேற்பார்வையில் 2003 - 2004 ஆம் ஆண்டில் நிகழ்த்தப்பட்ட இந்த ஆய்வேடு என் சொந்த முயற்சியால் உருவானது என்றும், இதற்கு முன் இந்த ஆய்வேடு வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் வழங்கப் பெறவில்லை என்றும் உறுதி அளிக்கின்றேன்.

இடம் : சேலம் - 7

நாள் : 27.01.2005

க. தேவி
ஆய்வாளர்
(க.தேவி)

**முனைவர் துரை. ஜெகநாதன், எம்.ஏ., (தமிழ்); எம்.ஏ., (ஆங்கிலம்);
டிப்.எட்.; செர்ட்.லிங்.; பிஎச்.டி.,**
தமிழ் இணைப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அரசு கலைக்கல்லூரி,
சேலம் - 7.

# மேற்பார்வையாளரின் சான்றிதழ்

க.தேவி என்பவர், சேலம் - 7, அரசு கலைக்கல்லூரித் தமிழ்த் துறையில் 2003-2004 ஆம் ஆண்டில் முழுநேர ஆய்வியல் நிறைஞர் (எம்.ஃபில்) பட்ட வகுப்பில் எனது மேற்பார்வையின் கீழ் ஆய்வாளராகப் பயின்றவர் என்றும், **"சங்க இலக்கியத்தில் பரணர் பாடல்கள் - ஓர் ஆய்வு"** என்னும் தலைப்பில் அவர் செய்துள்ள இவ்வாய்வு அவர்தம் சொந்த முயற்சியால் செய்யப்பட்டது என்றும், இதற்கு முன் இவ்வாய்வேடு வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

இடம் : சேலம் - 7.

நாள் : 27.01.2005

**முனைவர் துரை. ஜெகநாதன்,**
எம்.ஏ., (தமிழ்); எம்.ஏ., (ஆங்கிலம்);
டிப்.எட்.; செர்ட்.லிங்.; பிஎச்.டி.,
**மேற்பார்வையாளர்.**

Dr. D. JAGANATHAN,
M.A.,(Tam) M.A.,(Eng)
Dip.Ed., Cert.Ling.,Ph.D.,
Reader in Tamil
Govt. Arts College, SALEM-7.

# நன்றியுரை

2003-2004 ஆம் கல்வியாண்டில் முழுநேர எம்.:.பில் ஆய்வு மேற்கொள்ள அனுமதி வழங்கிய பெரியார் பல்கலைக் கழகத்திற்கும், சேலம் - 7, அரசு கலைக் கல்லூரிக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வு செய்வதற்குத் தேவையான உதவிகளைச் செய்து கொடுத்த சேலம்-7, அரசு கலைக் கல்லூரி முதல்வர் அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

எனக்குத் தமிழ்த்துறையில் ஆய்வு மேற்கொள்ள அனுமதியளித்த தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் செ.மாயாண்டி அய்யா அவர்களுக்கும், கூடுதல் துறைத் தலைவர் முனைவர் கு.சங்கரன் அய்யா அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது ஆய்வுத் தலைப்பினைத் தேர்ந்தெடுத்தது முதல் ஆய்வு முடியும் வரையில் எனக்குத் தேவையான அனைத்து உதவிகளையும் செய்ததுடன், எப்பொழுது சென்றாலும் இன்முகத்துடன் என்னை உற்சாகப்படுத்தியும், அரிய பல கருத்துகளைக் கூறியும், ஆய்வேட்டைச் செம்மையுடன் திருத்தி முழுமைப்படுத்திய எனது நெறியாளர் முனைவர் துரை.ஜெகநாதன், எம்.ஏ., (தமிழ்); எம்.ஏ., (ஆங்கிலம்); டிப்.எட்.; செர்ட்.லிங்.; பிஎச்.டி., அவர்களுக்கு மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எப்போதும் ஆய்வு மாணவர்களிடம் அன்போடும், பாசத்தோடும் நல்லெண்ணத்தோடும் நடந்து கொள்வதோடு பல சிந்தனைகளை வழங்கிய என் பேராசிரியர்கள் அனைவருக்கும் என் உள்ளம் கனிந்த நன்றியைக் காணிக்கையாக்குகிறேன்.

ஆய்வுக்குரிய நூல்களைத் தந்துதவிய தமிழ்த்துறை நூலகப் பொறுப்பாசிரியர் அவர்களுக்கும், கல்லூரி நூலகருக்கும், சேலம் பொது நூலகத்தாருக்கும், சேலம் தமிழ்ச் சங்க நூலகத்தாருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

மணமான பின்னும் வாழ்க்கையின் ஒளிவிளக்காய் விளங்கும் கல்வியினை மீண்டும் தொடரச் செய்து, நான் சோர்வடையும் பொழுதெல்லாம் என்னை உற்சாகப்படுத்தி, உறுதுணையாய் நின்ற எனது கணவர் திரு.டே.ச.ஸ்டீபன், என் செல்வமகள் ஸ்.பியர்ல் கிரேஸி மெர்லின் உட்பட என் குடும்பத்தார் அனைவருக்கும் நான் நன்றி சொல்லக் கடமைப்பட்டுள்ளேன்.

இவ்வாய்வேடு உருவாகப் பல உதவிகளை நல்கியதோடு, பல செய்திகளையும் அவ்வப்பொழுது கூறிய அனைத்து நண்பர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

இவ்வாய்வேட்டினைச் செம்மையுடன் கணிப்பொறி மூலம் உருவாக்கித் தந்த **"ஆய்வுப் பூங்கா" (PROJECT PARK)** உரிமையாளர் திரு.ந.செந்தில் அவர்களுக்கும் எனது நெஞ்சம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

க. தேவி

ஆய்வாளர்

**(க.தேவி)**

# சுருக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| 1. அகம். | - | அகநானூறு |
| 2. உ.ஆ. | - | உரையாசிரியர் |
| 3. குறள் | - | திருக்குறள் |
| 4. குறு. | - | குறுந்தொகை |
| 5. சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| 6. சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| 7. தொல். | - | தொல்காப்பியம் |
| 8. நற். | - | நற்றிணை |
| 9. நூற். | - | நூற்பா |
| 10. ப. | - | பக்கம் |
| 11. பதிற்று. | - | பதிற்றுப் பத்து |
| 12. புறம் | - | புறநானூறு |
| 13. மேலது | - | மேலே குறிப்பிட்ட நூல் |

# பொருளடக்கம்


| இயல் | தலைப்பு | பக்கங்கள் |
|---|---|---|
| | முன்னுரை | 1-3 |
| ஒன்று | வரலாற்றுக் குறிப்புகள் | 4-58 |
| இரண்டு | இலக்கியக் கூறுகள் | 59-93 |
| மூன்று | யாப்பமைதி | 94-106 |
| | முடிவுரை | 107 |
| | பின்னிணைப்புகள் | |
| | துணைநூற்பட்டியல் | |

# முன்னுரை

தமிழ் இலக்கியப் பரப்பில் முதன்மையாக இருப்பது சங்க இலக்கியம். சங்க இலக்கியத்தில், எத்துறையில் வல்லவர்களும் எப்பொருளை எண்ணி ஆராயப் புகுந்தாலும் அத்துறையினரின் அவாவும் ஆய்வும் நிறைவேறும் வகையில் பொருள் தரும் இயல்பினது.

சங்க இலக்கியப் புலவர்களில் அனைவரது நினைவுக்கும் முதன்மையாகத் தோன்றுபவர்களில் பரணரும் ஒருவராவர். சங்க இலக்கியம் ஒரு காலக் கண்ணாடி என்பதை விளக்கும் முகத்தான், பரணருடைய பாடல்களை ஆய்வு செய்வது தமிழ் மொழிக்கே சிறப்பு சேர்ப்பதாகும் என்ற எண்ணம் "சங்க இலக்கியத்தில் பரணர் பாடல்கள் - ஓர் ஆய்வு" என்னும் இவ்வாய்வேடு அமைய அடிப்படையாயிற்று.

## ஆய்வு நோக்கம்

சங்க இலக்கியச் சிறப்பினையும், சங்க இலக்கியப் பாடல்களுள் பரணர் பாடல்களில் நீங்காது இடம் பெற்றுள்ள சிறப்புகளையும் அவற்றின் இன்றியமையாமையையும் காய்தல், உவத்தல் இன்றி விளக்குவதே இந்த ஆய்வின் முதன்மையான நோக்கமாகும்.

## ஆய்வு எல்லை

பரணர் பாடல்களில் இடம் பெற்றுள்ள மன்னர்கள், போர்த்திறன், கொடைச்சிறப்பு, ஊர்கள் அவற்றின் சிறப்புகள், உவமை, கற்பனையழகு, வருணனைகள், இலக்கிய உணர்ச்சிகள், யாப்புநயம் போன்றவற்றை ஆராய்வது இந்த ஆய்வின் பேரெல்லையாகும்.

## ஆய்வு முறை

பகுப்பாய்வு முறையும், விளக்கமுறை ஆய்வு முறையும் இவ்வாய்வேட்டிற்கான ஆய்வு முறைகளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

## ஆய்வு முன்னோடியர்

இதுகாறும் சங்க இலக்கியத்தில் பலரும் பல்வேறு கோணங்களில் ஆராய்ந்தளித்த ஆய்வுரைகள், ஆய்வேடுகள் பலவாகும். எனினும் "சங்க இலக்கியத்தில் பரணர் பாடல்கள் - ஓர் ஆய்வு" என்னும் தலைப்பானது எந்த ஆய்வுக்கும் உட்படுத்தப்படவில்லை என்று இத்தலைப்பினைப் பின்பற்றியே இம்முயற்சியானது மேற்கொள்ளப்பட்டது.

## முதன்மை ஆதாரங்கள்

சங்க இலக்கியப் பாடல்களுள் பரணர் பாடல்களே இவ்வாய்வுக்கு முதன்மை ஆதாரங்களாக ஏற்றுக்கொள்ளப்பட்டது.

## துணை ஆதாரங்கள்

சங்க இலக்கியம் குறித்து வெளிவந்துள்ள நூல்களும், சில இலக்கண நூல்களும், காப்பிய நூல்களும், அறிஞர்கள் நூல்களில் இருக்கும் கருத்துகளும் துணை ஆதாரங்களாகக் கொள்ளப்பட்டு இவ்வாய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## இயல்பகுப்பு

முன்னுரை

| | | |
|---|---|---|
| இயல் ஒன்று | - | வரலாற்றுக் குறிப்புகள் |
| இயல் இரண்டு | - | இலக்கியக் கூறுகள் |
| இயல் மூன்று | - | யாப்பமைதி |

முடிவுரை

முன்னுரையில் ஆய்வு நோக்கம், ஆய்வு எல்லை, ஆய்வு முறை, ஆய்வு முன்னோடியர், ஆய்விற்குரிய முதன்மை ஆதாரங்கள் மற்றும் துணை ஆதாரங்கள் ஆகியன தரப்பட்டுள்ளன.

சங்க இலக்கியத்தில் மன்னராட்சி, மக்களாட்சி என்று இருவகை ஆட்சிமுறை இருந்து வந்தது. மக்கள் வாழ்வும் வளமும் பெற்று விளங்கினர்.

போர்வீரம், கொடைவீரம் போன்றவை சிறந்தவையாகக் கருதப்பட்டன. இவற்றை எல்லாம் கண்ணாடி போல் காட்டுவன சங்க இலக்கியங்களே.

தமிழ்நாட்டு வரலாற்று நிகழ்வுகளைத் தம் பாடல்களில் பாடியிருக்கும் பரணர் பாடல்கள் ஒரு வரலாற்றுக் களஞ்சியமாகத் திகழ்கின்றன.

"சங்க இலக்கியத்தில் பரணர் பாடல்கள் - ஓர் ஆய்வு" என்னும் இத்தலைப்பில் பரணரது அனைத்துப் (அகம். 34, நற். 12, குறு. 17, புறம். 13, பதிற்று. 5-ஆம் பத்து) பாடல்களும் ஆய்வுக்கு மேற்கொள்ளப்பட்டுள்ளன.

### வரலாற்றுக் குறிப்புகள்

நாட்டிற்குத் தலைமையாய் விளங்கும் மன்னர்கள், அவர்தம் போர்ச் செயல்கள், இல்லார்க்கு வருத்தாது இரங்கும் வள்ளல்கள், கொடைச் சிறப்பு, அரசர்கள் ஆண்ட நாடுகள், புகழ் மிக்க மலைகள், ஆறுகள் போன்றவை முதல் இயலில் இடம் பெற்றுள்ளன.

### இலக்கியக் கூறுகள்

உவமையணியின் சிறப்பு, பரணர் பாடல்களில் இவ்வணி அரசோச்சிய விதம், கற்பனையழகு, வருணனைச்சிறப்பு, எண்வகை மெய்ப்பாடுகளாக அமையும் உணர்ச்சிகள் ஆகியன இரண்டாம் இயலில் இடம் பெற்றுள்ளன.

### யாப்பமைதி

யாப்பு நயம், தொடை நயங்கள், தனிச் சொல், ஆசிரியப்பா பெற்றுள்ள இடம், சீர், தளை, அடி முதலியன மூன்றாம் இயலில் ஆராயப்பட்டுள்ளன. இறுதியாக முடிவுரைப் பகுதி அமைந்துள்ளது.

இதன்பின், பின்னிணைப்புப் பகுதிகள் அமைந்துள்ளன.

# இயல் - 1
# வரலாற்றுக் குறிப்புகள்

தமிழிலக்கிய வரலாற்றில் பொற்காலம் என்று கருதப்படுவது சங்ககாலம் ஆகும். சங்க இலக்கியத்தின் உயிர்நாடியாகக் காதலும், வீரமும் இருந்தாலும் இவற்றைப் பாடும் நோக்கில் வேறு பல பொருள்களையும் சங்கப் பாடல்களில் காணமுடிகின்றது.

சங்கப் புலவர்களுள் தலைசிறந்த புலவராகப் போற்றப்படுபவர் பரணர். மன்னர்கள், வள்ளல்கள் ஆகியோர்களின் பண்பு, போர்த்திறன், வலிமை முதலான பலவற்றையும் நன்கறிந்து பாடும் இயல்புடையராய் விளங்கிய பரணர், தம்முடைய ஒவ்வொரு பாடலிலும் ஏதேனும் ஒரு வரலாற்றுக் குறிப்பினைத் தந்துள்ளார்.

பெரும்போர் புரிந்து வெற்றிபெற்ற வேந்தரின் திறமும், புகழ்வாய்ப்ப உயிர்நீத்த மன்னவரின் மறமும், வறியோர்க்கு இல்லையென்னாமல் வாரி ழங்கிய வள்ளல்களின் மாண்பும், கொடைச்சிறப்பும், தமிழகத்தின் பல்வேறு ஊர்கள், சிறப்பு மிக்க மலைகள், ஆறுகள் போன்றவையும் பரணர் பாடல்களில் ிகுதியாகக் காணப்படுகின்றன.

பரணர் பாடல்களில் இடம்பெற்றுள்ள வரலாற்றுக் குறிப்புகள் கீழ்க்கண்ட றுந்தலைப்புகளில் ஆராயப்படுகின்றன.

1. மன்னர்கள், போர்கள்
2. வள்ளல்கள்
3. கொடைச்சிறப்பு
4. ஊர், மலை மற்றும் ஆறு

## 1. மன்னர்கள்

"மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்" என்னும் கூற்றிற்கு உரிமையுடைய சங்க இலக்கிய மன்னர்கள் பேராட்சி செய்து பெருவாழ்வு பெற்று, என்றும் அழியா நிலைத்த புகழைப் பெற்றிருப்பது பரணர் பாடல்களில் நோக்கப்படுகின்றது.

### அகுதை

நாளோலக்க மண்டபத்தில் அகுதை வீற்றிருக்கின்ற பொழுது கூத்தர்கள் தடாரிப்பறையை முழக்கியதும், தன்பால் வரும் புலவர்களுக்கு இனிய கள்ளுணவீந்து களிறுகளை வழங்கியதும், பாடல் மகளிர்க்கு மடப்பமுடைய பிடியானைகளைப் பரிசிலாக நல்கியதும் பரணரால் சிறப்பாகப் பாடப்பட்டுள்ளன.

"இன்கடுங் கள்ளின் அகுதை தந்தை
- - - - - - -  - - - - - - - அகவன் மகளிர்
மடப்பிடிப் பரிசில்"[1]

"வசைவிடக் கடக்கும் வயங்குபெருந் தானை
அகுதை களைதந் தாங்கு"[2]

### அஞ்சி

"நெடுநெறிக் குதிரைக் கூர்வேல் அஞ்சி"[3]

கூரிய வேலை உடையவனான அஞ்சி, நெடிய வழியினைக் கொண்ட குதிரைமலைக்குத் தலைவனாவான்.

### அழிசி, சேந்தன்

காவிரியாற்றினது பலரும் நீராடுகின்ற நீர்த்துறையில் நீராடுவோர்க்குத் துன்பந்தந்த மருப்பினையுடைய யானைகளை, அத்துறையின்கண் உள்ள மருதமரத்திலே கட்டியவன் சேந்தன். இவனுடைய தந்தை அழிசி, ஆர்க்காடு என்னும் ஊரினுக்குத் தலைவனும், விலங்கினங்களை வேட்டையாடுந்

தொழிலையுடையவனும் நிரல்பட்ட வாள்களையுடைய போர்வீரர் பலருக்குத் தலைவனுமாவான்.

"காவிரி
- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - மருதொடு பிணித்த
ஏந்து - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -சேந்தன் தந்தை
நிரைய ஒள்வாள் இளைஞர் பெருமகன்
அழிசி ஆர்க்காடு"[4]

## அழுந்தூர்த் திதியன், அன்னிமிஞிலி, கோசர்கள்

பிறர்க்குத் துன்பம் நேர்ந்த பொழுது அது தனக்கே நேர்ந்ததாக எண்ணி, அவர்தம் துன்பத்தினைப் போக்குவர் மேலானோர். அழுந்தூரில் வாழும், விரைந்தோடும் தேர்களையுடைய திதியன், அன்னிமிஞிலி என்பவளுக்காகக் கோசர்களைக் கொன்றொழித்த செய்தியினைப் பரணர் பாடலால் அறியலாகிறது.

"தந்தை
கண்கவி னழித்ததன் தப்பற் றெறுவர
ஒன்றுமொழிக் கோசர்க் கொன்றுமுரண் போகிய
கடுந்தேர்த் திதியன் அழுந்தைக் கொடுங்குழை
அன்னி மிஞிலியின் இயலும்."[5]

முதுகோசரின் அழகிய பொழிலில் அன்னிமிஞிலி என்பவளுடைய தந்தையின் பசு மேய்ந்துவிட, அப்பசு தன்னுடையதுதான் என்று அவள் தந்தை ஒப்புக்கொண்ட போதிலும், சினங்கொண்ட ஒன்றுமொழிக்கோசர் அன்னிமிஞிலி தந்தையின் கண்களைப் போக்கினர். இக்கொடுஞ் செயலைத் தாங்காத அன்னிமிஞிலி, திதியனிடத்தே சென்று முறையிட, திதியன் விரைந்து சென்று கோசர்களைக் கொன்று குவித்த செய்தியினைப் பரணர் பாடல் கூறுகிறது.

**ஆய்**

கடையெழு வள்ளல்கள் பரணரால் சிறப்பிக்கப்படுகின்றனர். இவ்வள்ளல்களுள் ஒருவனான ஆய் என்பவனைப் பற்றிப் பரணர்,

"வல்லினும் வல்லா ராயினுஞ் சென்றோர்க்குச்
சாலவிழ் நெடுங்குழி நிறைய வீசு
மாஅல் யானை ஆய்"[6]

என்று பரணர் சிறப்பித்துள்ள விதம் அவனது கொடைச்சிறப்பை விளக்கும்.

**எவ்வி**

நீடூரில் வாழ்ந்தவனான எவ்வி என்பவனின் மறைவுக்குப் பின் அவனிடத்துப் பெரும் பரிசில் பெற்று வாழ்ந்த பாணர் தம் தலை பொலிவிழந்து காணப்பட்டதாகக் கூறுகிறார் புலவர்:

"யாழிசை மறுகின் நீடூர் கிழவோன்
வாய்வா ளெவ்வி"[7]

"எவ்வி இழந்த வறுமையாழ்ப் பாணர்
பூவில் வறுந்தலை"[8]

**ஓரி**

கடையெழு வள்ளல்களுள் ஒருவனான ஓரியை "வல்வில்லோரி" என்று சிறப்பித்துக் கூறுவதிலிருந்தே ஓரியினுடைய வில்தொழில் திறம் நன்கு விளங்கும். கொல்லி மலைக்கு உரிமையுடையவனும் மழைபோன்ற வண்மையை உடையவனுமான ஓரியின் வள்ளல் தன்மையைப் பரணர்,

"திண்டேர்க்
கைவள் ளோரி கானந் தீண்டி
எறிவளி கமழு நெறிபடு கூந்தல்"[9]

என்றும்,

"வல்வில் லோரி கானம் நாறி
இரும்பல் லொலிவருங் கூந்தல்"[10]

என்றும்,

"மாரி வண்மகிழ் ஓரி கொல்லி"[11]

என்றும் சிறப்பித்துள்ளார்.

## கட்டி, தித்தன் வெளியன்

உறையூரிலிருந்து ஆட்சி புரிந்த தித்தன்வெளியனோடு போர் புரிய எண்ணிய கட்டி, தனக்குத் துணையாகப் பாணன் என்பவனைக் கூட்டிக் கொண்டு சென்றான். தித்தன்வெளியனது நாளோலக்க மண்டபத்தில் ஒலிக்கும் கிணைகளின் ஓசையைக் கேட்ட அளவிலேயே அவனது பெருமையை உணர்ந்து, கட்டி அஞ்சி ஓடிய செய்தி நகரெங்கும் பரவிப் பேரொலியை உண்டாக்கிற்று.

"வலிமிகு முன்பிற் பாணனொடு மலிதார்த்
தித்தன் வெளிய னுறந்தை நாளவைப்
பாடின் றெண்கிணைப் பாடுகேட் டஞ்சிப்
போரடு தானைக் கட்டி
பொராஅ தோடிய ஆர்ப்பு"[12]

கட்டி மரபினர் பற்றி **"சங்ககாலக் கொங்குநாடு"** என்னும் நூலில்,

"சங்க காலத்தே இக்கட்டி மரபினர் சத்தியமங்கலம் முதல் கிழக்கே காவிரியாலும், மேற்கு மலைச் சாரலும் எல்லையாக ஆண்டு வந்தனர். பவானியாற்றின் வடகரைப் பகுதியை ஆண்டு வந்தனர். கொள்ளேகால் பகுதியும் இக்கட்டியாட்சியில் அடங்கும். அசோகர் காலத்துக் கல்வெட்டு இவரைச் (கி.மு.273-232) சத்திய புத்திரர் என்று கூறும்"[13]

என்னும் குறிப்பு காணப்படுகின்றது.

**கழுவுள், வேளிர்**

"அடுபோர்

ஈரெழு வேளி ரியைந்தொருங் கெறிந்த

கழுவுள் காமூர்"[14]

சிறந்த போராற்றலையும், சிறந்த வள்ளண்மையையும் உடைய கழுவுள் என்பவனுக்கு உரிமையுடையதான காமூரை, ஒரு காலத்தில் பதினான்கு வேளிர்களும் ஒருங்கு கூடி அழித்த செய்தியை இப்பாடலால் அறியமுடிகின்றது.

**காரி**

"தேர்வண் மலையன்" என்றழைக்கப்படும் காரியினுடைய போர்த்திறன் முதலிய செயல்கள் பலவற்றுள்ளும், குறிப்பாகக் காரி தன் பகைவர்களின் ஆனிரைகளைத் தன்னுடைய வில்திறத்தால் கவர்ந்து உய்த்துக் கொண்டுபோகும் திறத்தை,

"முனையூர்ப்

பல்லா நெடுநிரை வில்லின் ஒய்யும்

தேர்வண் மலையன்"[15]

என்று அழகாக வருணித்துள்ளார் பரணர். காரி தன்னை நாடிவரும் இரவலர்க்குத் தேர்கொடுத்து சிறப்பிக்கும் வள்ளண்மையுடையவன் என்பதும் இவ்வடிகளால் விளங்குகிறது.

**தழும்பன்**

"பெரும்புண் ஏஎர் தழும்பன்"[16]

"வாய்மொழித் தழும்பன் ஊணூர்"[17]

பாணர்களைப் புரந்து காத்த தழும்பன் ஊணூரில் வாழ்ந்தவனும் தப்பாத வாய்மொழியினையுடையவனுமாவான்.

**தித்தன், ஐயை**

மழைபோன்று வாரி வழங்கும் வள்ளல்தன்மையுடைய தித்தன் நெல்லுடைமையாற் சிறந்த உறையூருக்கு உரிமையுடையவன் ஆவான். இவனது மகள் ஐயை என்பவள் கற்பில் சிறந்தவள்.

"அரிபெய் சிலம்பின் - - - - - - - - - - - -

- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -

இழையணி பணைக்கோ லயை தந்தை

மழைவளந் தரூஉ மாவண் தித்தன்

பிண்ட நெல்லி னுறந்தை"[18]

என்னும் அடிகள் தித்தனைக் குறித்து வருவனவாகும்.

சோழ மன்னனாகிய தித்தனின் காலத்தில் உறையூர்ப் புறங்காடானது பிறர் புகுதற்கு அரியதாயிருந்ததை,

"நொச்சி வேலித் தித்த னுறந்தைக்

கன்முதிர் புறங்காடு"[19]

என்னும் அடிகளால் அறியலாகிறது.

**நள்ளி**

கடையெழு வள்ளல்களுள் நள்ளியும் ஒருவன். நள்ளி வலியவில்லினையுடைய போர்வீரர் பலருக்குத் தலைவனாவான். நள்ளியினுடைய சோலையில் உள்ள காந்தள் பூக்களின் மணத்தை,

"வல்வி லிளையர் பெருமக னள்ளி

சோலை யடுக்கத்துச் சுரும்புண விரிந்த

கடவுட் காந்த ளுள்ளும் பலவுட

- - - - - - - - - - - - வாய்மலர் நாறி"[20]

என்னும் அடிகளால் நுகரமுடிகிறது.

**நன்னன், மிஞிலி, கோசர்கள்**

நன்னன் உதியன் என்றழைக்கப்படும் இவனுக்கு ஏழில் மலையும், பாழியும், பாரமும் உரிமையுடையவாகும். கல்வியில் சிறந்த, வாய்மையில் புகழ்பெற்ற மிஞிலி என்பவன் இந்நன்னனுக்குப் படைத்தலைவனாக இருந்து ஆற்ற வேண்டுவன ஆற்றி, நன்னனால் பாழியையும், பாரத்தையும் அருளப் பெற்றான். இது,

"முறையின் வழாஅ தாற்றிப் பெற்ற
கறையடி யானை நன்னன் பாழி
ஊட்டரு மரபின் அஞ்சுவரு பேய்க்
கூட்டெதிர் கொண்ட வாய்மொழி மிஞிலி"[21]

"பாரத்துத் தலைவன் ஆர நன்னன்
ஏழி னெடுவரைப் பாழிச் சிலம்பு"[22]

"மிஞிலி காக்கும்
பாரத் தன்ன - - - - - - - - - - - -"[23]

என்னும் பாடலடிகளால் விளங்கும்.

நன்னனுக்கு உரிமையுடையதான நறியமாமரத்தின் கனியைக் கோசர் குடிப்பெண் தின்றுவிட்டமைக்காக, மனம் இரங்காத நன்னன் அப்பெண்ணைக் கொலை செய்த வரலாறும் பரணரால் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வரலாறு இன்றளவும் உலகறிந்த ஒன்று.

"புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்
கொன்பதிற் றொன்பது களிற்றொ டவணிறை
பொன்செய் பாவை கொடுப்பவுங் கொள்ளான்
பெண்கொலை புரிந்த நன்னன்"[24]

என்னும் அடிகள் இதற்குச் சான்றாகும்.

இதனால் சினம் அடைந்த ஒன்றுமொழிக்கோசர் நன்னன் ஊரிலில்லாத சமயம் அவனது நறிய மாமரத்தை வீழ்த்தியதை,

"நன்ன
னறுமா கொன்று நாட்டிற் போக்கிய
ஒன்று மொழிக் கோசர்"[25]

என்னும் அடிகளால் அறியமுடிகிறது.

"பொற்புடை
விரியுளைப் பொலிந்த பரியுடை நன்மான்
வேந்த ரோட்டிய ஏந்துவேல் நன்னன்
கூந்தற் முரற்சியிற் கொடிதே"[26]

இவ்வடிகள், வேந்தர் பலரை வென்ற நன்னன், அவர் உரிமை மகளிரின் கூந்தலால் அவர்களுடைய குதிரைகளுக்குக் கயிறு திரித்தவனுமாவான் என்பதைக் காட்டுகின்றன.

**பழையன்**

சோழ அரசர் மறவனான பழையன் மழைபொழிவது போல் கணைகளை விரைய எய்யும் திறம் வாய்ந்தவனாவான். இவனது வேல் பகைவருயிரைத் தப்பாது வாங்கும் திறத்ததாகும். பழையனின் ஊர் காவிரியை அடுத்த மிக்க அழகுவாய்ந்த போஒர் என்னும் ஊராகும்.

"சோழர் மறவன்
புனல்மலி புதவிற் போஒர் கிழவோன்
பழையன் ஒக்கிய வெல்போற்
பிழையல கண்ணவ நோக்கியோர் திறத்தே"[27]

மோகூர் மன்னன் பழையனிடமிருந்து, இப்பழையனை வேறுபடுத்து வதற்காகப் பரணர், "சோழர் மறவன்", "போஓர் கிழவோன் பழையன்" என்று குறிப்பிட்டுள்ளமை நோக்கத்தக்கது.

**பிண்டன்**

"தனந்தரு நன்கலம் சிதையத் தாக்கும்
சிறுவெள் ளிறவின் குப்பை யன்ன
உறுபகை தரூஉம் மொய்ம்மூசு பிண்டன்"[28]

பிண்டன் பெருவேந்தன் அல்லன் என்றாலும் பெருமை மிக்க தலைவர்களுக்கு இடையூறு பல இழைத்துக் கொண்டிருந்தான்.

**பேகன்**

வள்ளல்தன்மையால் சிறப்புப் பெற்ற பேகனைப் பரணர்,

"மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளிப்
படாஅ மீத்த கெடாஅ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான் பேக"[29]

என்றும்,

"உடாஅ போரா வாகுத லறிந்தும்
படாஅ மஞ்ஞைக் கீத்த வெங்கோ"[30]

என்றும் பலவாறு புகழ்ந்து பாடியுள்ளார்.

பிறருக்காக மனம் வருந்தி இரங்கும் பேகன், பரத்தையின்பால் வேட்கை கொண்டு தன் மனைவியின் துயரம் அறியாதவனாக இருந்த வேளையில் அத்துயரத்தை அறிந்த பரணர், பேகன்பால் சென்று மனைவிக்கு உற்ற துயரைப் பாடலாக,

"களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்

- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -

அறஞ்செய் தீமோ அருள்வெய் யோயென

இஃதியா மிரந்த பரிசிலஃ திருளின்

இனமணி நெடுந்தே ரேறி

இன்னா துறைவி யரும்படர் களைமே"[31]

என்று பாட, பேகன் அவருக்குப் பரிசுகள் பல கொடுக்க முயன்றான். பரணரோ, யாம் வேண்டும் பரிசில் இவையல்ல, இளநங்கை (பேகனின் மனைவி)ஒருத்தியின் துயரைக் களைந்து அவளோடு நீர் இனிது இணைந்து வாழ்வதே யாம் வேண்டும் பரிசில் என்று தக்கவாறு எடுத்துப் பாடியவிதம், புலவர் தமக்கேயுரிய அறத்தில் நின்றமையைக் காண முடிகின்றது.

### பொதியில் திதியன்

இருவேறு திதியனைப் (அழுந்தூர்,பொதியில்) பற்றிப் பாடியுள்ள பரணர், பொதியில் திதியனைப் பற்றிக் கூறுமிடத்து, இத்திதியன் வெற்றி கொள்ளும் படையினை உடையவனும், ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியனுக்கு நண்பனுமாவான்.

"உருமிசை

களிறுகண் கூடிய வாண்மயங்கு ஞாட்பின்

ஒளிறுவேற் றானைக் கடுந்தேர்த் திதியன்

- - - - - - - - - - - - - - - - - - - - - -

புகலரும் பொதியில்"[32]

திதியனின் பொதியில் மலையில் ஏறுதற்கரிய முகடுகள் இருப்பதையும், ஆங்கே மிகுதியான புலிகள் திரிவதையும், இம்மலையின் உயர்ந்த மரங்களில் மிகுதியாக

இருந்த தேனைக் குறவர் அழித்து அருந்தியதையும் பரணர் பாடலால் அறியமுடிகிறது.

**மத்தி**

பரதவர்களுக்குத் தலைவனான மத்தி காவிரியை அடுத்துள்ள கழார் என்னும் ஊரினனாவான்.

"சுடர்ப்பூந் தாமரை நீர்முதிர் பழனத்து

- - - - - - - - - - - - - - - - - - - - -

பல்வேள் மத்தி கழாஅர்"[33]

என்னும் பரணரின் பாடலடிகள் இதனை விளக்கும்.

**வல்லங்கிழவோன்**

நல்ல தேர்ப்படைகளையும், கடிய களிற்று யானைகளையும் உடைய சோழர் மரபினனான வல்லங்கிழவோன், தன் நாட்டில் கொடுஞ்செயல் நடவாது காத்து வந்ததிறத்தை,

"நற்றேர்க்

கடும்பகட் டியானைச் சோழர் மருகன்

- - - - - - - - - - - - - வல்லங் கிழவோன்"[34]

"வல்லங் கிழவோன்

நல்லடி யுள்ளா னாகவும் ஒன்னார்

கதவ முயறலு முயல்ப"[35]

என்னும் அடிகளால் அறியலாகிறது.

**விச்சியர் பெருமகன்**

விச்சியர் பெருமகனைப் பற்றிப் பரணர் கூறியுள்ளமை:-

விற்படை பொருந்திய படைகளையுடைய விச்சியர்களுக்குத் தலைவனான இப்பெருமகன் தன் பகை வேந்தரொடு போர் செய்த பொழுது, பாணர்கள் மிகவும் அஞ்சி நிற்க அதைக் கண்ட குறும்பர்கள் மகிழ்ந்து மிக்க ஆரவாரம் செய்ததை,

"வில்கெழு தானை விச்சியர் பெருமகன்

வேந்தரொடு பொருத ஞான்றைப் பாணர்

புலிநோக் குறழ்நிலை கண்ட

கலிகெழு குறும்பூர் ஆர்ப்பு"[36]

என்று பரணர் மிக அழகாகப் பாடியுள்ளார். அரசர்கள் அழிவதனால் குறும்பர்களுக்குண்டான பெருமகிழ்வையும், பாணர்கள் நோக்கிய பார்வையைப் பரணர், "பாணர் புலிநோக்கு உறழ்நிலை" என்று குறித்ததும் எண்ணத்தக்கது.

## விராஅன்

"தெவ்வர்த் தேய்த்த செவ்வேல் வயவன்

மலிபுனல் வாயில் இருப்பை"[37]

"தேர்வண் விராஅன் இருப்பை"[38]

என்ற அடிகள், பாவலர்க்குத் தேர்கொடுக்கும் வண்மையையுடைய, அழகு செறிந்த இருப்பை என்னும் ஊரினுக்கு உரிமையுமுடைய விராஅனின் வலிமையையும், வீரத்தையும் காட்டுகின்றன.

## ஆட்டனத்தி, ஆதிமந்தி, மருதி

"ஈட்டெழிற் பொலிந்த ஏந்துகுவவு மொய்ம்பின்

ஆட்டனத்தி நலனயந்து - - - - - - - - - - - -

- - - - - - - - - - - - காவிரி வவ்வலின்

மாதிரந் துழைஇ மதிமருண் டலந்த

ஆதிமந்தி காதலற் காட்டிப்

படுகடல் புக்க பாடல்சால் சிறப்பின்

மருதி யன்ன மாண்புகழ் பெறீஇயர்"[39]

"கலிகொள் சுற்றமொடு கரிகால் காண

- - - - - - - - - - - - ஆடும் அத்தி அணிநயந்து

காவிரி கொண்டொளித் தாங்கு"[40]

என்னும் பாடலடிகள், காவிரியின் கழார்ப் பெருந்துறையில் விழாவின் போது கரிகாலன் தன் சுற்றத்தோடு அவ்விழாவினைக் காண, ஆட்டனத்தி மிக்க பொலிவுடன் ஆடிக் கொண்டிருந்தான்; ஆட்டனத்தியின் அழகினைக் கண்ட காவிரி, அவனை ஈர்த்துக்கொண்டு செல்ல, ஆட்டனத்தியின் மனைவி ஆதிமந்தி, அவனை எங்குத்தேடியும் காணப்பெறாது முடிவில் மருதி என்பவளால் அவனைப் பெற்றாள் என்ற வரலாற்றினைக் கூறுகின்றன.

ஆட்டனத்தியை ஆதிமந்திக்குக் காட்டிப் பின் கடலுள் புகுந்த மருதி, பலரும் புகழும் பெருமையடைந்ததைப் பரணர் தகுந்த உவமைகளால் சிறப்பித்து உள்ளதைக் காணமுடிகிறது.

## போர்கள்

ஒரு நாட்டு வரலாற்றில் வீரம் முதன்மையான இடத்தைப் பெற்றிருப்பதை உலக வரலாற்றிலும், தமிழக வரலாற்றிலும் காண முடிகின்றது. ஒரு நாட்டின் பெருமையும் புகழும் அந்நாட்டு மன்னர், மறவர்களின் வீரத்தாலேயே ஏற்பட்டுள்ளதாகும். பரணர் தம்முடைய பாடல்களில் பல போர்களைக் குறிப்பிட்டு உள்ளார்.

## அதிகன், பசும்பூண் பாண்டியன், கொங்கர்

வேங்கை மலைக்கு உரிமையுடைய அதிகன், எப்பொழுதும் வாய்மையையே பேசுகின்ற சிறப்பினையும், இரவலர் விரும்பிய பொருளை இல்லையென்னாமல் ஈந்த பெருமையையும் உடையவனுமாவான்.

பசும்பூண்பாண்டியனின் படைத்தலைவனான அதிகன், இப்பாண்டியனின் ஏவலால் வாகை என்னுமிடத்தில் கொங்கரோடு மேற்கொண்ட போரில் அதிகன்

தன் யானையோடே இறந்துபட, ஒளிவிளங்குகின்ற வாட்படையையுடைய கொங்கர் மிக மகிழ்ந்து பலத்த ஆரவாரம் செய்தனர் என்று அறியமுடிகிறது.

"வாய்மொழி
நல்லிசை தரூஉ மிரவலர்க் குள்ளிய
- - - - - - - - - - - - கழறொடி அதிகன்"[41]

"கூகைக் கோழி வாகைப் பறந்தலை
பசும்பூண் பாண்டியன் வினைவ லதிகன்
களிறொடு பட்ட ஞான்றை
- - - - - - - - - - - -கொங்கர் ஆர்ப்பு"[42]

## அறுகை, மோகூர் மன்னன்

"நுண்கொடி யுழிஞை வெல்போ ரறுகை
- - - - - - - - - - - - - - - - - -
மோகூர் மன்னன் முரசங்கொண்டு
- - - - - - - - - - - - ஒழுகை உய்த்தோய்"[43]

அறுகை என்பவன் வெல்லுகின்ற போரைச் செய்பவனாவான். தான் செய்த பல போர்களிலும் வெற்றியே கண்ட அறுகை, பெருமிதங்காரணமாக மோகூர்மன்னன் பழையனோடு போர் செய்தான். அப்பெரும் போரில் பழையன் வேந்தர்களையும், வேளிர்களையும் தனக்குத் துணையாகக் கொண்டு நெடுமொழி கூறிப் பொருத அறுகை பிறரால் நீக்க முடியாத பேரிடையூற்றில் அகப்பட்டுத் தோற்று ஒளிந்திருந்தான். சேரன் செங்குட்டுவன் அறுகைக்கு உண்மை நண்பனாதலால் குட்டுவன், மோகூர் மன்னனை எதிர்த்து அறுகையைக் காத்தான் என்னும் வரலாற்றுக் குறிப்பும் பரணர் பாடலில் இடம் பெற்றுள்ளது.

**ஆய் எயினன்**

கடிய நடையினையுடைய குதிரைகளைக் கொண்டவன் ஆய் எயினன். நன்னன் என்பவன் புன்னாட்டினைத் தாக்கிய பொழுது, ஆய் எயினன் பாழியின்கண் அந்நாட்டு மக்களை அஞ்சாதீர் என்று கூறி அவர்களைப் பாதுகாத்தான். இதனால் உண்டான பகைமையில் ஆய் எயினனுக்கும், நன்னனின் படைத்தலைவனான மிஞிலிக்கும் இடையே பாழிப் பறந்தலையில் நிகழ்ந்த பெரும் போரில், ஆய் எயினன் இறந்துபட, பறவைகள் அவனது உடலில் வெயில் படாது காத்ததை,

"விசும்பின் விளங்கு ஞாயிற்று - - -

ஒண்கதிர் - - - - - - சிறகரில் கோலி

நிழல் செய்து உழறல்"[44]

என்று குறிப்பிட்டுள்ளார்.

"கொடிதேர்ப்

பொலம்பூண் நன்னன் புன்னாடு கடிந்தென

- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -

அஞ்சல் என்ற ஆய் எயினன்

- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -

தன்னுயிர் கொடுத்தனன் சொல்லிய தமையாது"[45]

"உருவினை நன்ன றருளான் - - - - - -

- - - - - - - - - - - - - பல்வேன் மகளிர்

- - - - - - - - - - - - - அடுக்கிய பூசல்

அகுதை - - - - - - - - - - - -"[46]

ஆய் எயினன் இறந்த செய்தி கேட்டுப் போர்க்களத்தே அவனது உரிமை மகளிர் அழுத ஒலியைக் கேட்டும் நன்னன் ஆங்குச் செல்லாது கண்ட அகுதை,

தான் சென்று அம்மகளிரின் பெருந்துயரைப் போக்கினான் என்ற குறிப்பும் பரணரால் அறியப்படுகின்றது.

தன் சொல்லைக் காத்தற்பொருட்டுத் தன் உயிரையே கொடுத்த ஆய் எயினனின் திறத்தை இவ்வடிகள் காட்டுகின்றன.

**கணையன், பாணன், ஆரியப் பொருநன்**

பாணன் என்பவன் ஒப்பாரும் மிக்காரும் இல்லாத ஒரு மல்லனாவான். பாணனை வெல்லமாட்டாத கணையன், பாணனை வெல்லுதற் பொருட்டு ஆரியமல்லன் ஒருவனை அழைத்து வந்து பாணனொடு மற்போர் செய்வித்தான். பாணனோ, ஆரிய மல்லனை அணைத்து நெருக்கிக் கொன்று பிணமாக எறிந்தான். அதைக் கண்ட கணையன் மிகவும் நாணினான் என்னும் அரிய வரலாற்றுக் குறிப்பினைக் கீழ்வரும் பாடலால் அறிய முடிகிறது.

"பாணன்
மல்லடு மார்பின் வலியுற வருந்தி
எதிர்தலைக் கொண்ட ஆரியப் பொருநன்
நிறைத்திரண் முழவுத்தோள் கையகத் தொழிந்த
திறன்வேறு கிடக்கை நோக்கி நற்போர்க்
கணையன் நாணி யாங்கு"[47]

உடல் வேறு, தலைவேறு என ஆரியப் பொருநனின் உடல் கிடப்பதைக் காட்டுகிறது இப்பாடல்.

**சோழன் வேற்ப.்றடக்கைப் பெருவிறற் கிள்ளி,**
**சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன்**

இப்பெரும் மன்னர்கள் இருவரும் போர் என்னும் ஊர்ப்புறத்துப் பொருது போர்க்களத்தில் வீழ்ந்த நிலைமையைக் கண்ட பரணர் பெரிதும் மனம் இரங்கி,

"சாந்தமை மார்பில் நெடுவேல் பாய்ந்தென

வேந்தரும் பொருதுகளத் தொழிந்தனர் இனியே

என்னா வதுகொல் தானே

- - - - - - - - - - - - - - - - - -

காமர் கிடக்கை அவரகன்றலை நாடே"[48]

என்று பாடியுள்ளார்.

## சோழன் உருவப்ப.்.றேர் இளஞ்சேட் சென்னி

நால்வகைப் படைகளைக் கொண்டு போர் செய்யும் இளஞ்சேட் சென்னி, அழகிய தேரில் பொலிவுற்று விளங்கிய தன்மையையும், பொருது வெற்றிபெற்ற காலத்தில் யானை முதலியவற்றின் நிலைமையையும் பரணர் அழகாக வருணித்துள்ளார்:-

"நீயே, அலங்குளைப் பரீஇஇவுளிப்

- - - - - - - - - - - - - - - - - -

தாயில் தூவாக் குழவி போல

ஓவாது கூஉம்நின் உடற்றியோர் நாடே"[49]

பலநாடுகளை அழித்து, அவர்களை வெற்றி கொண்ட இம்மன்னனை நினைத்துப் பகைவர் நாடு தாயில்லாத குழந்தை போல எப்பொழுதும் நடுக்கத்தால் வருந்தும் என்பதும் அறியப்படுகிறது.

## கரிகால் வளவன்

பொருநராற்றுப் படையின் தலைவனான கரிகால் வளவனைப் பற்றிப் பல வரலாறுகள் உண்டு. மிக்க வலிமையும், திறமையுமுடைய இம்மன்னன் பல போர்களிலும் வெற்றி கொண்டவனாவான்.

காடுகெடுத்து நாடாக்கிக் காவிரிக்குக் கரையெடுத்துப் பெரும்புகழ் பெற்ற கரிகால் வளவன், வெண்ணி என்னும் ஊரின்கண் தன்னை எதிர்த்து

வந்த சேரனையும், பாண்டியனையும், அவர்களோடே வந்த பதினொரு வேளிர்களையும் தோற்றோடும்படிச் செய்தவனாவான். சிறப்புப்பெற்ற இம் மன்னர்களின் போர்முரசங்கள் அப்போர்க்களத்தில் கேட்பாரற்றுக் கிடப்பதனைத் தெளிவாகக் காட்டியுள்ளார் பரணர்.

"காய்சின மொய்ம்பிற் பெரும்பெயர்க் கரிகால்
- - - - - - - - - - - - வெண்ணி வாயில்
சீர்கெழு மன்னர் - - - - - - - - - - - -
இமிழிசை முரசம் பொருகளத் தொழியப்
பதினொரு வேளிரொடு வேந்தர் சாய
மொய்வலி யருத்த ஞான்றை
தொய்யா அழுந்தூர் ஆர்ப்பு"[50]

கரிகால் மன்னனுக்குண்டான சினத்தைப் பரணர், பகைவரைச் சுடுதற்கியன்ற சினம் என்று குறித்தமை இச்சோழ மன்னனின் பேராற்றலைக் காட்டுகிறது.

## சேரன் செங்குட்டுவன்

செங்குட்டுவனைப் பற்றிப் பரணர் பலவாறு விதந்து பாடியுள்ளார். அப்பாடல்கள் அகத்திலும், புறத்திலும் (புறநானூறு, பதிற்றுப் பத்தின் 5-ஆம் பத்து) இடம் பெற்றுள்ளன.

குட்டுவன் கடலிடத்தே வேலேந்திய படைகளைக் கொண்டு, அக்கடலில் செல்லும் கலங்களுக்குத் தீங்கு செய்த பகைவரை வென்ற செய்தியைப் பரணர் பலவிடங்களிலும் பாடியுள்ளார். செங்குட்டுவன், அரசர் எழுவரை வென்று அவர்களுடைய முடிகள் ஏழனாலும் செய்த மாலையையணிந்த பெருமை உடையவன் என்பதைப் பரணர்,

"எழுமுடி மார்பி னெய்திய சேரல்"[51]

என்று புகழ்ந்துள்ளார்.

குட்டுவன் வேந்தர் பலருடன் பொருது பல்வேறு நாடுகளை அழித்ததையும், போரில் வெற்றி பெற்றுப் போர்க்களத்தில் பெருமிதந்தோன்ற விளங்கியிருந்ததையும் கண்ட பரணர் அவனது வெற்றியைப் பலவாறு பாடியுள்ளார்.

"வடதிசை எல்லை இமய மாகத்

- - - - - - - - - - - - - - - - - -

சொல்பல நாட்டைத் தொல்கவி னழித்த

போரடு தானைப் பொலந்தார்க் குட்டுவ"[52]

"இருப்புமுகஞ் செறித்த வேந்தெழின் மருப்பிற் "[53]

குட்டுவனது வெற்றியையும் வல்லமையையும் அறிந்த அரசர்பலர் தம் பகைவருக்கு அஞ்சிக் குட்டுவனோடு நட்புக் கொண்டு வாழ்ந்திருந்ததையும், எவரையும் வணங்குதலில்லாத ஆண்மையை உடையவனாயினும் பாடும் புலவர் முதலியோரை வணங்கும் இயல்பினன் என்பதையும் பரணர் பாடல்கள் தெளிவாக்குகின்றன.

"வணங்கிய சாயல் வணங்கா வாண்மை

- - - - - - - - - - - - நின் பெயர்வா ழியரோ

மேவரு சுற்றமொ டுண்டினிது நுகரும்"[54]

"நொசிவுடை - - - - - - - - - - - -

விழுமியோர் துவன்றிய வண்கனாட்பின்"[55]

"மன்னர்

இனியாருளரோ நின் முன்னு மில்லை

- - - - - - - - - - - -இருங் கமஞ்சூல்

வயங்குமணி யிமைப்பின் வேலிடுபு

முழங்குதிரைப் பனிக்கடன் மறுத்திசி னோரே"[56]

**பெரும்பூட் பொறையன்**

"பெரும்பூண் பொறையன் பேஎமுதிர் கொல்லி"[57]

"திண்டேர்ப் பொறையன் தொண்டி முன்றுறை"[58]

"வெண்வேல்

களிறுகெழு தானைப் பொறையன் கொல்லி"[59]

என்ற அடிகள் பொறையனைப் பற்றியவை.

சென்றபோர்தொறும் வெல்லும் சிறப்பினையுடைய பொறையனுக்குக் கொல்லிமலையும், தொண்டித் துறைமுகமும் உரிமையுடையவையாகும். பொறையனுடைய மறத்திண்மையைப் பரணர், தேரின் மேலேற்றிக் கூறியுள்ளமை நோக்கத்தக்கது.

## 2. வள்ளல்கள்

கொடை என்றாலே கடையெழு வள்ளல்களே நினைவுக்கு வருவர். கொடைச்சிறப்பு, வள்ளல்தன்மை இவற்றில் முதலிடம் பெற்றவர்கள் இவர்களே. இவர்களின் காலத்திற்குப் பின் இன்று வரையில் எத்தனையோ வள்ளல்கள் தோன்றி மறைந்து இருக்கின்றனர் என்றாலும், இலக்கிய உலகில் இவ்வள்ளல்கள் பெற்ற சிறப்பிடத்தை இன்றுவரை எவரும் பெறவில்லை என்பது நம்பத்தக்க ஒன்றாகும்.

"பண்புடையார் பட்டுண்டுலகம் அஃதின் றேல்

மண்புக்கு மாய்வது பின்"[60]

என்ற வள்ளுவரின் வாக்கின்படி ஓரி முதலிய கடையெழு வள்ளல்கள் முதல் இன்று வரையில் நல்லோர் இல்லையெனில் இவ்வுலகம் என்றோ மனித வாழ்க்கைக்குத் தகுதியற்றதாக மாறியிருக்கும்.

இன்று வரையிலும் எல்லோராலும் சிறப்பாகப் பேசப்படும் கடையெழு வள்ளல்கள் பரணர்தம் பாடலிலும் இடம்பெற்றுள்ளனர்.

இவ்வள்ளல்களுள் ஒருவனான பேகனின் சிறப்புக்கருதி பேகனது அருளும், கொடையும், பிறவும் நாடெங்கும் பரவின.

"மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளி

- - - - - - - - - - - - - - - - - - நல்லிசை

- - - - - - - - - - - - - - - - - கலிமான் பேகன்"[61]

என்ற அடிகள் அதற்குச் சான்றாக அமைகின்றன.

பரணர் பேகனையடைந்து பாடிப் பெருஞ்செல்வம் பெற்றார் என்பதைப் பரணரே,

"உடாஅ போரா வாகுத லறிந்தும்

படாஅம் மஞ்ஞைக் கீத்த வெங்கோ"[62]

என்றும்,

"கடும்பரி நெடுந்தேர் பூட்டிவிட் டசைஇ

- - - - - - - - - - - - - - - - - - - - - - - - -

இன்னே மாயினே மன்னே"[63]

என்றும் பாடியிருப்பதிலிருந்து அறியமுடிகிறது.

பேகன் கொடைமடம் உடையவன் என்பதைப் பரணர்,

"அறுகுளத் துகுத்தும் அகல்வயற் பொழிந்தும்

- - - - - - - - - - - - மாரிபோல

படைமடம் படான்பிறர் படைமயக் குறினே"[64]

என்று பாடியுள்ளார். பேகனின் கொடைமடத்திற்கு மாரியின் வரையாத இயல்பினை ஒப்பிட்டிருப்பதால் பேகனது கொடைத்தன்மை நன்கு புலனாகும்.

பேகன், பிறரது வறுமையைப் போக்க வழங்குதலேயன்றி, மறுமைப்பயன் கருதி வழங்கும் இயல்பினனல்லன். இத்திறத்தில் பேகன், ஆய் அண்டிரனை ஒத்தவனாவான்.

"மறுமை நோக்கின்றோ வன்றே

- - - - - -- - - - - அவன் கைவண்மையே"[65]

"வண்டுபடு நறவின் வண்மகிழ்ப் பேகன்

- - - - - -- - - - - மாமலை நாறி"[66]

இவ்வடிகளில் உள்ள "வண்டுபடு நறவின் வண்மகிழ்" என்னும் அடைமொழி, பேகனுக்கே இயைதலும் இதனை மலைக்கேற்றின் சிறவாமையும் அறிய முடிகின்றது.

## ஓரி

இன்குடிமக்களை மட்டுமல்லாது இரவலர்களாக வந்த பொருநர், பாணர், கூத்தர், விறலியர் முதலானோருக்கும் கொடைகொடுத்துச் சிறப்பித்தவன் கடையெழுவள்ளல்களுள் ஒருவனான ஓரி என்பவன்.

சங்ககால மன்னர்கள் படைவீரத்தில் சிறந்து விளங்கியது மட்டுமல்லாது கொடை வீரத்திலும் புகழ்பெற்று இருந்ததை,

> "போர்ச்செயலில் பிறரோடு ஒப்பநில்லாது மேம்பட்டு நின்ற நெப்போலியன் முதலானவர்களின் ஆண்மையை வீரம் என்று கருதியது போல், மழைபோல் வழங்குவதால் மேம்பட்டு நின்ற பெருமிதத்தைக் கொடைவீரம் என்று சிறப்பித்தது கவனிக்கத்தக்கது"[67]

என்று பி.ஸ்ரீ. கூறுகிறார்.

கொடைவீரத்தில் சிறப்புப் பெற்ற ஓரி, கலைகாக்கும் காவலர்களான கலைஞர்களைக் காத்ததல்லாது, கலை வாழ வேண்டும் என்பதற்காகக் கலைஞர்களுக்கு வறுமை மீண்டும் வராத அளவிற்குப் பொருள் கொடுத்துக் காத்து நின்றவனாவான்.

"ஓங்கு இருங் - - - - - -- - - - - -

ஓம்பா ஈகை விறல் வெய்யோனே"[68]

என்று வண்பரணர் போன்ற புலவர்களாலும் பாராட்டப்பெற்ற ஓரியை, பரணர் பலவாறு சிறப்பித்துள்ளார்.

"திண்டேர்

கைவள் ஓரி கானந் தீண்டி

எறிவளி கமழும்"[69]

"மாரி வண்மகிழ் ஓரி கொல்லி"[70]

ஓரியினுடைய கைகள், மழைபோன்று வாரி வழங்கும் வள்ளல் தன்மையால் சிறந்திருந்ததையும், இவனுடைய பூஞ்சோலை நறுமலர் மிக்குடையதாய், சுற்றுப்புறங்களிலெல்லாம் நறுநாற்றம் கமழ்வதாய்த் திகழ்ந்து இருந்ததையும், கொல்லிமலை இவனுக்கு உரியதாயிருந்தது என்பதையும் பரணர்தம் பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

ஓரியினிடத்தில் கொடை பெற்றவர்கள் தம் குலத்தொழிலையே மறந்து விடுமளவுக்கு மெய்மறந்து இருந்தனர்.

## ஆய்

வேள் ஆயின் கொடைச்சிறப்பு புலமைமிக்க சான்றோரால் வெகுவாகப் புகழப்பட்டுள்ளன.

ஆய் தன் மனைவியரது மங்கலநாண் தவிர மற்றவையனைத்தையும் பரிசிலர்க்கு வழங்கிவிட்டனனாயினும், கொடுக்கும் இன்பத்தைப் பட்டறியாது தம் வயிறருத்திக் கழியும் மற்றப் பெருஞ்செல்வர்கள் மனைபோலப் பொலிவிழக்காமல் இவன் அரண்மனை கொடைத்திறனால் அழகுமிகுந்து விளங்கியதை,

"களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்

- - - - - - - - - - - - - - - - - -

ஈகை யரிய விழையணி மகளிரொடு

- - - - - - - - - - - - - - - - - -

முரைசுகெழு செல்வர் நகர் போலாதே"[71]

என்று முடமோசியார் குறிப்பிடுகிறார்.

பல புலவர்களாலும் பாடப்பெற்ற இவ்வள்ளலினுடைய அருமை பெருமைகள் பரணராலும் பலபடியாகப் புனைந்து பாராட்டப்பட்டுள்ளன.

தன்பால் பரிசில் வேண்டிவரும் இரவலர் வல்லராயினும் வல்லரல்லராயினும் அவர் வேண்டுமளவு நல்கும் இயல்பினனான ஆய், பெரிய மண்பாண்டத்தில் சமைத்த சோற்றினை அவர்தம் வயிறு நிரம்ப வழங்கும் வள்ளண்மையும், இரவலர்க்குத் தன்பாலுள்ள களிறனைத்தையும் வழங்கும் இயல்பினையும் உடையவன் என்றும் சிறப்பிக்கிறார்.

"வல்லினும் வல்லாராயினுஞ் சென்றார்க்கு

- - - - - - - - - - - - - - - - - - நிறைய வீசு

தலையாற்று நிலை இய - - - - - -

வேய்"[72]

ஆய், ஒருகால் நீலநாகமொன்றால் அளிக்கப்பெற்ற அருமைபெருமை வாய்ந்ததோர் ஆடையைச் சிவபிரானே அணியத்தக்கதென்று கருதி, அப்

பிரானுக்கு உவந்து சாத்தினான் என்று சிறுபாணாற்றுப்படையில் வியக்கப் படுகிறான்.

"நீலநாகம் நல்கிய கலிங்கம்

- - - - - - - - - - - - - - - - -

ஆர்வ நன்மொழி ஆய்"[73]

**காரி**

காரி தேர்வண்மலையன் என்றும் அழைக்கப்படுவான். இரவலர்க்குத் தேரை வழங்கும் வள்ளியோனாகிய மலையன் என்று அது பொருள்படும்.

"முனையூர்ப்

பல்லா நெடுநிரை வில்லி னொய்யுந்

தேர்வண் மலையன்"[74]

**அதிகன்**

எப்பொழுதும் வாய்மையையே பேசுகின்ற சிறப்பினையுடைய அதிகன், தன்னை நாடிவரும் நல்லிசைதரும் இரவலர்களுக்கு அவர்கள் கருதிய பொருள்களுக்கு மேல் உவந்து ஈயும் வள்ளண்மையுடையவன் என்று பரணர் பாடியுள்ளார்.

"வாய்மொழி

நல்லிசை தரூஉ மிரவலர்க் குள்ளிய

நசைபிழைப் பறியாக் கழறொடி யதிகன்"[75]

**3. கொடைச்சிறப்பு**

வேந்தர்க்கு வெற்றியை விளைவிப்பது வீரம் என்றாலும், புகழினையும் மாறா மனமகிழ்ச்சியினையும் அளிப்பது ஈரம் என்னும் கொடைப்பண்பு ஆகும். சங்க மன்னர்கள் பலர் வீரமும் ஈரமும் குறைவறக் கொண்ட கொடை மன்னர்களாக விளங்கினர்.

"கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும்

உடையானாம் வேந்தர்க் கொளி"[76]

என்றும்,

"வறியார்க் கொன்றீவதே ஈகை"[77]

என்றும்,

"மேலுலகம் இல்லெனினும் ஈதலே நன்று"[78]

என்றும் ஈதலின் சிறப்பினைத் திருவள்ளுவர் நன்கு விவரித்துள்ளார்.

வேந்தர்க்கெல்லாம் விளக்காக அமைவதற்கு முதலாவது அவ்வேந்தன், வேண்டுவார்க்கு வேண்டுவன கொடுத்தல் வேண்டும் என்பர். இன்னும் மேலுலகம் இல்லை என்று கூறினாலும் வறியார்க்குக் கொடுப்பதே சிறந்த நெறி என்று வள்ளுவர் கூறியதிலிருந்து ஈதலின் மேன்மையினை நன்கு உணரமுடிகிறது.

பரணர் தம்முடைய பாடல்களில் கொடைமன்னர்களையும், அவர்தம் கொடைச் சிறப்பினையும் புகழ்ந்து பாடியுள்ளார். பரணர், 5-ஆம் பத்தின் பாட்டுடைத் தலைவனாகிய கடல் பிறக்கோட்டிய சேரன் செங்குட்டுவனின் கொடைப் பண்பை உண்மை பிறழாமல் காட்டியுள்ளார்.

அருள்சுரக்கும் நெஞ்சினனான செங்குட்டுவனை,

"ஓம்பா வீகையின் வண்மகிழ் சுரந்து

கோடியர் பெருங்கிளை வாழ"[79]

என்று பாடியுள்ளார்.

அருவிவற்றிப் பெருவளம் குன்றிய காலையில் வானம் வளமான மழையைச் சொரிந்தது போலத் தன்னையடைந்தவர்களுக்கு வாரி வழங்கி, ன்கலம் ஈயும் பண்பினனான செங்குட்டுவன், விறலியர்க்குப் பெண் ானைகளையும், கொண்டிமள்ளர்களுக்குக் களிறுகளையும், அகவலர்களுக்குக்

குதிரைகளையும், வயிரியர்களுக்குக் கள்ளினையும் அளிக்கும் கொடை வண்மையைச் சிறப்பித்துக் காட்டுகிறார் பரணர்.

"கொண்டி மள்ளர் கொல்களிறு பெறுக

- - - - - - - - - - - - - - - - - -

அகவலன் பெறுக மாவே

நிறைந்து நெடிதிராத் தசும்பின் வயிரியர்

உண்டெனத் தவாஅக் கள்ளின்

வண்கை வேந்தேநின் கலிமகி ழானே"[80]

இப்பாடலின் இறுதி அடியில் சேரன் செங்குட்டுவன் கையினைப் பரணர், 'வண்கை' எனப் புகழ்ந்திருப்பதிலிருந்தே இவனுடைய கொடைத்திறம் நன்கு விளங்கும்.

"பெரிய வாயினும் அமர்கடந்து பெற்ற

- - - - - - - - - - - - - - - - - - - -

- - - - - - - - - - - - கசடில் நெஞ்சம்"[81]

கரவாது கொடுத்துண்ணும், சேரனின் கொடை நெஞ்சத்தினைப் பரணர், "கசடில் நெஞ்சம்" என்று பொருத்தமுறக் குறிப்பிட்டுள்ளார்.

"பைம்பொற் றாமரை பாணர்ச் சூட்டி

ஒண்ணுதல் விறலியர்க்கு ஆரம் பூட்டி"[82]

என்னும் பாடலிலும், பாணர்களுக்குப் பொற்றாமரைப் பூவினையும், திறல்பட ஆடும் ஒளிபொருந்திய நெற்றியினையுடைய விறலியர்க்கு ஆரத்தினையும் அளித்த செய்தி கூறப்பட்டுள்ளது. இவ்வாறு வழங்குவது சங்க காலத்தில் மரபாக இருந்து வந்தது. இம்மரபைக் குறித்து,

"போருக்குப் புறப்படுகிற அரசன் போர் வீரருக்கு விருந்து தருவது எப்படி ஓர் மரபோ, அப்படியே இரவலர்களை அழைத்து அவர்களுக்குத் தானம் தருவது தரும மரபு"[83]

என்று விளக்கம் தருகிறார் கவிஞர் வைரமுத்து.

செங்குட்டுவன் தனக்கு என ஒருவகைச் சோறும், பரிசிலர்க்கு என ஒருவகைச்சோறும் சமைக்குமாறு தன் ஏவலரைப் பணிக்கின்ற வழக்கம் இல்லையென்பதனைப் பரணர்,

"சோறுவேறு என்னா ஊன்றுவை அடிசில்"[84]

என்று செங்குட்டுவனுடைய கொடைப்பண்பினை அழகுற விளக்கும் வண்ணம் பாடியுள்ளார்.

**அகுதை தந்தை** என்றழைக்கப்படும் அகுதை நாளோலக்கத்தில் இருக்குங்கால் தன்பால் வரும் புலவர்களுக்கு இனிய கள்ளுணவீந்து, களிற்றையும் அழகிய அணிகலன்களையும் பரிசிலாக வழங்கும் இயல்பினன் என்று பரணரால் சிறப்பிக்கப்பட்டுள்ளான்.

"இன்கடுங் கள்ளின் அகுதை தந்தை
வெண்கடைச் சிறுகோ லகவன் மகளிர்
மடப்பிடிப் பரிசில்"[85]
"- - - - - - - - - - - - - - - - - - - களிற்றோடு
நன்கலன் ஈயும் நாண்மகிழ் இருக்கை
அவைபுகு பொருநர்"[86]

**தழும்பன்**

தழும்பனது கொடைத்தன்மையை **"அபிதான சிந்தாமணி"** என்னும் நூலில்,

"இவன் ஒரு கொடையாளி. ஊணூர் என்னும் நகரத்தின் தலைவன். போரிற்புண்பட்ட அழகுடையவனென்று சிறப்பிக்கப் பட்டவன். தழும்புடைமையின் தழும்பனெனப்பட்டான். இவன் இயற்பெயர் புலப்படவில்லை"[87]

என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

"வாய்மொழித் தழும்பன்"[88]

"இரும்பாண் ஒக்கற் தழும்பன்"[89]

பரணரின் இவ்வடிகளிலிருந்து, பாணர்களைப் புரந்து காத்த தழும்பன் ஒரு சிறந்த கொடையாளி என்பது விளங்கும்.

**எவ்வி**

கொடையிற் சிறந்த மற்றொரு வள்ளலான எவ்வி, தன்னைப் பாடி வந்த பாணர்களுக்குப் பொற்பூவளிக்கும் கொடையாளனாக விளங்கினான். இம்மன்னனின் மறைவுக்குப் பின்னர், யாழ்ப்பாணர்கள் தம்மை ஆதரிப்பார் இன்றித் தலைபொற்பூச்சூடாத வறுந்தலை ஆயிற்று என்று எவ்வியின் கொடைத்திறனைப் பரணர் பாடியுள்ளார்.

"எவ்வி இழந்த வறுமையாழ்ப் பாணர்
பூவில் வறுந்தலை போல"[90]

பாணர்களுக்குப் பொற்பூ வழங்குதல் பண்டைகால மரபாகும்.

**4. ஊர், மலை மற்றும் ஆறு**

பண்டைப்புலவர்கள் இயற்கைப் பொருள்களின் தன்மைகளை உற்றுநோக்கி அறிந்து, அவற்றைத் தெளிவாக அமைத்துச் செய்யுள் செய்வர். அவருள் பலர், நாட்டின் பல பகுதிகளுக்குச் சென்று மலைகள், ஆறுகள், காடுகள் முதலியவற்றை நேரில் கண்டறிந்து அங்கு வாழும் மன்னர்கள், வள்ளல்கள், தலைவர்கள் ஆகியோர்களின் பண்பு, போர்த்திறன், வலிமை, அறிவு

முதலான பலவற்றையும் நன்கறிந்து பாடும் இயல்புடையராய் விளங்கினர். அத்தகையரான புலவர்களுள் பரணர் தலைசிறந்தவர் ஆவார்.

பரணர் தமிழகத்தின் பல இடங்களிலும் சென்று வந்தவர் என்பது, பல்வேறு மலைகள், நாடுகள், ஊர்கள் முதலானவற்றைத் தம் பாடல்களில் கூறியிருத்தலால் விளங்கும்.

**அரிமணவாயில்**

இவ்விடத்தே எவ்வி என்பவன் மாற்றாருடைய வலிமையை அழித்து வெற்றி பெற்ற பொழுது தம் படைவீரர்க்குக் கள்ளோடு கூடிய பெருஞ்சோறு வழங்கிய அப்பகற்பொழுதில் மிகுந்த ஆரவாரம் உண்டாயிற்று என்பதையும், இவ்வூர் உறத்தூர் பக்கத்தேயுள்ளது என்பதையும் பின்வரும் அகப்பாடல் தெரிவிக்கின்றது.

"எவ்வி ஏவல் மேவார்
அரிமண வாயில் உறத்தூர் ஆங்கட்
கள்ளுடைப் பெருஞ்சோற் றெல்லிமிழ்"[91]

**அலைவாய்**

"பறந்த தோகை
அணங்குடை வரைப்பகம் பொலியவந் திறுக்குந்
திருமணி விளக்கின் அலைவாய்ச்
செருமிகு சேஎயோ குற்ற சூளே"[92]

இப்பாடலில் வரும் அலைவாய் என்பது இந்நாளில் புகழ்பெற்று விளங்கும் திருச்செந்தூர் ஆகும். இதன் கோட்டகத்தில் தோகையை உடைய மயில் தெய்வங்களும், முருகக் கடவுளும் உறைகின்றனர் என்றும் அறியப்படுகிறது.

**அழுந்தூர்**

பரணரால் குறிப்பிடப்பட்ட இவ்வூரைப் பற்றி டாக்டர் கே. பகவதி,

"முதலில் அழுந்தூர் எனவும் அழுந்தை எனவும் குறிக்கப்பட்ட இவ்வூர், இங்குள்ள கோயில் சிறப்புப் பெற்ற பின்னர் திருஅழுந்தூர் என்றாகிப் புராணக் கதையின் செல்வாக்குக் காரணமாக, தேர் அழுந்தூர் எனப்பெயர் பெற்றிருக்க வாய்ப்புண்டு"[93]

என்று குறிப்புத் தந்துள்ளார்.

ஒவ்வோர் ஊரைப் பற்றியும் குறிப்பிடும் பரணர் அவ்வூரைப் பற்றியதான சில குறிப்புகளையும் தந்துள்ளார்.

"தந்தை
கண்கவின் அழித்ததன் - - - - - - - - - - -
கடுந்தேர்த் திதியன் அழுந்தை - - - - - - - - -
அன்னி மிஞிலியின் இயலும்"[94]

என்னும் அடிகளில், இவ்வூர் திதியனுக்கு உரிமையுடையதாயிருந்தது என்றும், அன்னிமிஞிலி என்பவள் தன் தந்தையின் கண்ணைச் சிதைத்த கோசர்களைத் திதியன் கொன்றவுடனே, சிறந்த குழைகளைத் தரித்துக்கொண்டு இவ்வூரில் உலவினாள் என்ற வரலாற்றுக் குறிப்பும் காணப்படுகிறது.

மயிலாடுதுறையை அடுத்துள்ள இவ்வூரில், வெண்ணியில் கரிகாலன் வெற்றி பெற்றபோது விழாவெடுக்கப்பட்டதை,

"காய்சின மொய்ம்பிற் பெரும்பெயர்க் கரிகால்
- - - - - - - - - - - - வெண்ணி வாயில்
தொய்யா அழுந்தூர் ஆர்ப்பினும்"[95]

எனக் காட்டுகிறார்.

### ஆர்க்காடு

அழிசிக்கு உரிமையுடைய இந்நகரத்தில், ஆர் (அத்தி) என்னும் மரங்கள் நிறைந்த காடாயிருந்ததனால் இவ்வூர் ஆறுகாடு என மயங்கி, வடமொழியில் "ஷடாரண்யம்" என்றும் வழங்குவர். தற்பொழுது வேலூர் மாவட்டத்தில் பாலாற்றங்கரையில் உள்ள இவ்வூரின் அழகினைப் பரணர்,

"அழிசி ஆர்க்கா டன்ன இவள்"[96]

என்று தலைவியின் இயற்கை அழகிற்கு ஒப்புமையாகக் கூறியுள்ளார்.

### ஆலமுற்றம்

தம் பாடல்களில் பல ஊர்களைக் காட்டியுள்ள பரணர் அங்கே நடந்த சில நிகழ்ச்சிகளையும் குறிப்பிட்டுள்ளார்.

"ஞால நாறு நலங்கெழு நல்லிசை
நான்மறை - - - - - - - - - - - -
னால முற்றங்"[97]

நிலவுலகம் முழுவதும் தோன்றுகின்ற, நன்மை பொருந்திய புகழையுமுடைய, இருக்கு முதலிய நான்கு மறைகளாகிய பழைய நூல்களைத் திருவாய் மலர்ந்தருளிய, மூன்று கண்களையுடைய செல்வனாகிய சிவபெருமான் எழுந்தருளிய ஆலமுற்றம் என்னும் திருப்பதி என்பது விளங்குகிறது.

சங்ககாலத்திலேயே பலவற்றையும் மிகத் தெளிவாகவும் அழகாகவும் தம்பாடலில் குறிப்பிட்டுள்ள விதம் பரணரது இலக்கியப் புலமைக்குச் சான்றாக அமைகிறது.

### அட்டவாயில்

பரணரால் குறிக்கப்பெற்ற இவ்வூரில், கொடிகள் அசைந்து விளங்குகின்ற தெருக்களையும், பெரிய வயல்களையும், செல்வர்கள் பலர் வாழ்ந்திருந்ததையும் காட்டுகிறது.

"செல்வர் கடுந்தேர் குழித்த - - - - - - - - - - -

நெடுங்கொடி நுடங்கும் அட்டவாயில்"[98]

என்பது அப்பாடல் அடிகளாகும்.

## இருப்பை

பாவலர்க்குத் தேர்கொடுக்கும் வண்மையையுடைய, விராஅன் என்பவனுக்கு உரிமையுடையதான இவ்வூரானது சிறப்புமிகுந்த வளமுடையது என்று இவ்வூரின் இயற்கையழகினை மிக அழகாகக் காட்டுகிறார் பரணர்.

"வெண்ணெல் அரிநர் - - - - - - - - - - -

தேர்வண் விராஅன் இருப்பை அன்னஎன்"[99]

"மலிபுனல் வாயில் இருப்பை"[100]

தலைவியினுடைய பழமைதொட்டு வந்த அழகுக்கு இருப்பையின் அழகினை ஒப்புமைக் காட்டுவது இவ்வூரினது பெருமையை நன்கு விளக்கும்.

## உறத்தூர்

பரணர் சில ஊர்களைக் குறிப்பிடும் பொழுது, அவ்வூரில் நடந்த சில நிகழ்ச்சிகளைக் கொண்டும் அவ்வூரின் பெருமையை விளக்குகின்றார்.

"வாய்வாள் எவ்வி ஏவல் மேவார்

- - - - - - - - - - - - பசும்பூட் பொருந்தலர்

அரிமணவாயில் உறத்தூர் ஆங்கட்

கள்ளுடை பெருஞ்சோற் றெல்லிமிழ் அன்ன"[101]

உறத்தூரில், பசும்பூட்செழியன் தன் ஏவலை மேற்கொள்ளாதிருந்த எவ்வியின் வலிமையை அடக்கிப் பெருஞ்சோறு எடுத்த வரலாறு கூறப்படுகிறது. இது மிகுந்த பேரார்ப்போடு நடந்ததாகும்.

**உறையூர்**

> "உறந்தை என்ற ஊர் மக்களின் சிக்கனம் போன்ற பல காரணங்களால் பின்னர், மருவி வழங்கினும், மக்களிடம் உறையூர் என்ற பெயரும் செல்வாக்கு இழக்கவில்லை என்பதையே இப்பெயரின் வாழ்வு காட்டுகிறது"[102]

என்று உறந்தை என்றழைக்கப்படும் இவ்வூரினைப் பற்றிக் கே. பகவதி கூறியுள்ளார்.

> "மாவண் தித்தன் வெண்ணெல்வேலி உறந்தை"[103]
>
> "நொச்சி வேலித் தித்த னுறந்தைக்
> கன்முதிர் புறங்காட் டன்ன"[104]
>
> "மலிதார்த்
> தித்தன் வெளிய னுறந்தை நாளவை"[105]

பரணரின் இவ்வகப் பாடல்களில் இவ்வூர், தித்தனுக்கு உரியதாயிருந்தது என்றும், தித்தனது நாளோலக்கம் மிக்க சிறப்புடன் இவ்வூரில் நடைபெற்றது என்றும் அறியப்படுகிறது.

காவிரியாற்றங்கரையில் உள்ள வளங்கொழிக்கும் இவ்வூரைப் பற்றி,

> "இது சோழர்களுடைய பழைய நகரம். இ∴து உறந்தையென்றும் கோழியென்றும் வழங்கப்படும். பழைய உறையூர், திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் பாண்ட மங்கலத்தில் இருபதடிக்குக் கீழ் இது இருக்கிறது. இது மண்மாரியால் முழுகியது"[106]

என்னும் குறிப்பு காணப்படுகின்றது.

> "நெல்லுடைமையாற் சிறந்த உறையூர்"[107]

என்னும் அடியும், உறையூரின் வளத்தை விளக்கும்.

**ஊணூர்**

"வெண்ணெல் லரிஞர் தண்ணுமை வெரீஇக்

கண்மடற் கொண்ட தீந்தே னிரியக்

கள்ளரிக்குங் - - - - - - - - - - -

வாய்மொழித் தழும்ப னூணூர்"[108]

என்று புலவர் பரணர், இவ்வூரின் அழகினை உள்ளவாறு தம் பாடலில் எடுத்துக் காட்டியுள்ளார். ஊணூர், தப்பாத வாய்மொழியினையுடைய தழும்பன் என்பவனுக்கு உரிமையுடையதாகும்.

**கழார்**

இவ்வூரில் மிகுந்த நீரால் தாக்குண்ட மருத மரங்களும், உயர்ந்த தோட்டங்களும், தழைத்த பயிரையும் நெற்கதிரையும் உடைய வயல்கள் நிறைந்துள்ளதாகவும், இவ்வூரின் பொதுநிலத்தில் நெருப்பின் பிழம்புகள் போன்ற தாமரை மலர்களும், அழகிய வள்ளைக் கொடிகளும், வாளைமீன், நீர்நாய் போன்றவையும் பெற்ற சிறப்பினையும் விளக்குகின்றார் பரணர்.

"சுடர்ப்பூந் தாமரை நீர்முதிர் பழன

- - - - - - - - - - - - - - - - - - - - - - -

பல்வேள் மத்தி கழாஅர்"[109]

"மலிபுனல் பொருத மருதோங்கு படப்பை

ஒலிகதிர்க் கழனிக் கழாஅர் முன்றுறை"[110]

"கழாஅர்ப் பெருந்துறை விழவின் ஆடும்

ஆட்டனத்தி நலனயந் துரைஇ

- - - - - - - - - - - - - காவிரி வவ்வலின்"[111]

என்ற பாடலடிகளிலிருந்து, மத்தி என்பானுக்குரியதான இவ்வூர்த் துறையில்தான், ஆட்டனத்தி மிக்க பொலிவுடன் நாட்டியமாடுகையில், ஆட்டனத்தியின்

பேரழகினைக் கண்ட காவிரி அவனை ஈர்த்துக் கொண்டுபோய்விட்டது என்னும் இன்றியமையாததோர் வரலாற்றுக் குறிப்புப் பெறப்படுகிறது.

**காமூர்**

"ஈரெழு வேளி ரியைந்தொருங் கெறிந்த
கழுவுள் காமூர்"[112]

பரணரால் குறிப்பிடப்பெற்ற இவ்வூரினை, ஒரு காலத்தில் பதினான்கு வேளிர்களும் ஒருங்குகூடிப் போரிட்டழித்தனர். **"சங்ககாலச் சிறப்புப் பெயர்கள்"** என்னும் நூலில்,

"கழுவுளின் நாட்டில் பாலும், தயிரும், ஆயர் மகளிரால் தயிரினின்றும் எடுக்கப்படும் வெண்ணையும் நிரம்பியிருக்கும். சேரமானின் வீரர்கள் அந்த வளமான நாட்டையும் காமூர் நகரத்தையும் பாழாக்கினர்"[113]

என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

**குறும்பூர்**

குறும்பர்கள் உறையும் இவ்வூரில் விற்படை பொருந்திய விச்சிக்கோன் என்பவன் தன் பகைவேந்தரோடு போர் செய்த காலத்தில் இவ்வூரார் பெரிதும் ஆரவாரம் செய்தனர் என்று பரணர் பாடல் கூறுகிறது.

"வில்கெழு தானை விச்சியர் பெருமகன்
வேந்தரொடு பொருத ஞான்றைப் பாணர்
புலிநோக் குறழ்நிலை கண்ட
கலிகெழு குறும்பூர் ஆர்ப்பு"[114]

**குன்றூர்**

"பழன யாமைப் பாசறை - - - - - - - - - - - -
தொன்றுமுதிர் வேளிர் குன்றூர் அன்னவென்
நன்மனை நனிவிருந்தயரும்"[115]

தலைவியினுடைய மிக்க விருந்தினரைப் போற்றும் நல்மனை இவ்வூரின் வளமைக்கு ஒப்புமையாகக் காட்டப்பட்டுள்ளவை, சங்ககாலத்தில் மேண்மையாகக் கருதப்பட்ட விருந்தோம்பும் பண்பினை நன்கு வெளிப்படுத்துகிறது.

**கூடல்**

பாண்டியர்களின் தலைநகரமாகிய கூடல், மதுரைக்கு வழங்கப்பட்ட மற்றொரு பெயராகும். இதற்கு நான்மாடக்கூடல், சிவராஜதானி, பூலோக கயிலாயம், துவாத சாந்தபுரம், சீவன் முத்திபுரம், ஆலவாய், கடம்பவனம் போன்ற வேறுபெயர்களும் உண்டு. பாண்டிய மன்னர்களின் தலைநகரமாகப் பண்டு தொட்டு இருந்துவரும் மதுரை, இலக்கியங்களில் மிக்க மணம் கமழ்கின்றது.

கூடல் என்பதற்கு விளக்கமாக, **"இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள்"** என்னும் நூலில்,

> "சங்க காலத்தில் கூடி இருந்து தமிழாய்ந்தமை காரணம் என இதற்குக் கூறுவர். அக்காலத்தில் இத்தகைய நிலை அதிகமிருந்தமை காரணமாக, "கூடல்" என்ற வழக்கு மிகுதியாக இருந்தது எனலாம்"[116]

என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்றான சிறப்புமிக்க **"சிலப்பதிகார"த்** தலைவனான கோவலன் கொலையுண்ட இம்மதுரையைப் பற்றிச் சிலப்பதிகார உரையில் வீரத்தால் மேம்பட்ட வண்மையால் உயர்ந்த மதுரை என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

> "ஓங்குயர் கூடல் ஊர்துயி லெடுப்ப"[117]

என்பது அப்பாடல் அடியாகும்.

> "மறப்போர்ச் செழியன்
> பொய்யா விழவின் கூடற் பறந்தலை
> உடனியைந் தெழுந்த இருபெரு வேந்தர்"[118]

இவ்வூரில் செழியன் தன்னை எதிர்த்து வந்த சேர, சோழ வேந்தரை எதிர்த்து வென்றான் என்றும் பரணர் குறிப்பிட்டுள்ளார்.

**தொண்டி**

மேலைக் கடற்கரையடுத்துக் கீழ்க்கடலில் அமைந்துள்ள இத்துறை, திண்ணிய தேரையுடைய சேரமன்னன் பொறையனுடையதாகும். இத்துறை வளத்தினைப் பரணர்,

"குணகடல் திரையது பறைதபு நாரை
திண்டேர்ப் பொறையன் தொண்டி முன்றுறை
அயிரை ஆரிரைக் கணவந்து"[119]

என்று குறிப்பிட்டுள்ளார்.

**நீடூர்**

எவ்வி என்பவனுக்கு உரிமையுடையதான நீடூரின் பெயர்க் காரணத்தை,

> "நீடூர் என்பது இன்றும் சுட்டப்படும். இவ்வூர் தஞ்சாவூர் மாவட்டத்தில் அமைகிறது. பழமையான ஊர்மக்கள், ஊரின்செழிப்பு காரணமாக நீண்டகாலம் குடியிருப்பாகக் கொண்ட ஊர் என்ற நிலையில் நீடூர் என்ற பெயர் அமைந்திருக்குமோ என்ற எண்ணம் எழுகிறது"[120]

என்று கே.பகவதி கூறுகிறார்.

இவ்வூரின் தெருக்களில் யாழின் இசை எங்கும் பரவியிருந்ததைப் பரணர்,

"யாழிசை மறுகின் நீடூர் கிழவோன்
வாய்வாள் எவ்வி"[121]

என்று குறிப்பிட்டுள்ளார்.

**பாரம்**

"மிஞிலி காக்கும் பாரம்"[122]

என்னும் அடியிலிருந்து, இவ்வூர் மிஞிலி என்பவனால் காக்கப்பட்டது என்றும், இவ்வூரினுக்கு உரிமையுடைய நன்னன் என்னும் வள்ளற்பெருமானின் படைத் தலைவன் மிஞிலி, நன்னனுக்காக ஆய்எயினனைக்கொன்று அவ்வெற்றியின் பொருட்டு இவ்வூரானது நன்னனால் மிஞிலிக்குக் கொடுக்கப்பட்டிருக்க வேண்டும் என்றும் அறியப்படுகிறது.

**பாழி**

நன்னனுக்கு உரிமையுடைய இவ்வூர்ப் பறந்தலையில் மிஞிலி, ஒரு பேய்க்கு ஊட்டுவிழாவினைச் சிறப்பாக நடத்தி நன்னனுக்குத் தான் முறை தவறாது ஆற்ற வேண்டுவன ஆற்றி, இவ்வூரைப் பெற்றான் என்னும் குறிப்பும் பரணர் பாடலால் அறியப்படுகிறது:-

"கறையடி யானை நன்னன் பாழி
ஊட்டரு மரபி னஞ்சுவரு பேஎய்க்
கூட்டெதிர் கொண்ட வாய்மொழி மிஞிலி"[123]
"நன்னன் உதியன் அருங்கடிப் பாழித்
தொன்முதிர் வேளி ரோம்பினர் வைத்த
பொன்"[124]
"அருந்தெறன் மரபிற் கடவுள் காப்ப
- - - - - -  - - - - - - பாழி ஆங்கண்
அருங்கல வெறுக்கை"[125]
"நன்னன் புன்னாடு கடிந்தென
யாழிசை மறுகின் பாழி"[126]

என்னும் பாடலடிகளாலும், இதன் வளத்தைப் பரணர் மிக அழகுற எடுத்துக்காட்டியுள்ளார்.

**புகார்**

காவியத்தலைவி கண்ணகியின் ஊராகிய இந்நகரம் காவிரிபூம்பட்டினம் என்ற சிறப்புப்பெயரும் கொண்டது.

பொதுவற்ற சிறப்பினையுடைய புகார் நகரத்தின் மேன்மையைச் **"சிலப்பதிகார"** நாடுகாண்காதையின் உரையில்,

> "உலகின் கண்ணுள்ளோர் பலரும் புகார்க்கண் வாணிகத்தின் பொருட்டு வந்து சேர்வாராகலானும், எத்துணையும் பெரியதோர் நகரமாகலானும் புகார் நகரினை உலகமே போலக் கொண்டு அதன்வாயிலை உலக இடைகழியென்பர்"[127]

என்று சிறப்பாகக் காட்டப்பட்டுள்ளது.

சோழர் தலைநகரமாயிருந்த இவ்வூரின் உயர்ந்த மதிலைக் குறிப்பிடும் பரணர் இவ்வூரானது, மகரமீனினது முதுகு போன்ற உச்சியையுடைய வானத்தைத் தீண்டுகின்ற மதில் என்றும், இங்குள்ள சிறந்த வீடுகளைக் கண்ட புலவர், இவ்வீடுகளானது மேல்நோக்கிப் பார்ப்பவர்க்குத் தம்முடைய நிழல் தோன்றாதபடி மிகவும் உயர்ந்த நல்ல இல்லம் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

> "மகர நெற்றி வான்றோய் புரிசைச்
> சிகரந் தோன்றாச் சேணுயர் நல்லிற்
> புகாஅர் நன்னாட் டதுவே"[128]

**போஒர்**

சோழர் மறவனாகிய பழையன் என்பவனுக்கு உரிமையுடையதான இவ்வூர் சோழநாட்டில் காவிரியையடுத்துள்ளது.

"பழையன் காவிரி வைப்பிற் போஒர்"[129]

## மாந்தை, முசிறி

இவ்விரு ஊர்களும் கடல்பிறக்கோட்டிய வேல்கெழு குட்டுவன் உடையதாகும். முசிறி என்னும் நகரமானது மேலைக் கடற்கரையிலுள்ள கொடுங்கோளூரையடுத்துள்ளது. இது முற்காலத்தில் சிறந்த துறைமுகப் பட்டினமாயிருந்தது.

இத்துறைமுகங்கள் குறித்த பரணரின் பாடலடிகள்:

"குரங்குளைப் புரவிக் குட்டுவன் மாந்தை"[130]

"புனலங் கள்ளின் பொலந்தார்க் குட்டுவன்
முழங்குகடன் முழவின் முசிறி"[131]

## மலைகள்

சங்க இலக்கியத்தில் மக்கள் இயற்கையோடு ஒன்றி வாழ்ந்தமையைப் பல பாடல்கள் படம்பிடித்துக் காட்டியுள்ளன. நாட்டின் பாதுகாப்பு அரணாக விளங்கும் மலைகளில் சில, பரணரின் பாடல்களில் இடம்பெற்றுள்ளன.

பரணரால் சிறப்பாகப் பாடப்பெற்ற மலை கொல்லிமலையாகும். சங்க காலத்தில் கொங்கு நாட்டிற்கும், சோழ நன்னாட்டிற்கும் எல்லையாக அமைந்து இருந்தது இக்கொல்லிமலை. இம்மலை, தொன்மை மட்டுமல்லாது வரலாற்றுச் சிறப்பும் மிக்கதாகும்.

இக்கொல்லிமலை, வடதிசையில் நாமகிரிப்பேட்டை வரையிலும், தென் திசையில் எருமைப்பட்டி வரையிலும், மேற்குத்திசையில் சேந்தமங்கலம் வரையிலும் பரவி ஓங்கி வளர்ந்து நிற்கிறது. இது நாமக்கல், பெரம்பலூர் மாவட்டங்களின் எல்லையாகவும் விளங்குகிறது.

இத்தகைய சிறப்புப்பெற்ற இம்மலையைப் பரணர்திறம்படப் பாடியுள்ளார். இம்மலையில் உறையும் கொல்லித் தெய்வத்தைப் பற்றியும் பரணர் சிறப்பாகப் பாடியுள்ளார்.

"பெரும்பூண் பொறையன் பேஎமுதிர் கொல்லி
- - - - - -  - - - - - - நல்லியற் பாவை"[132]

"திண்டேர்க்
கைவள் ளோரி கானம் தீண்டி
- - - - - -  - - - - - - எறிவளி"[133]

"செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி
- - - - - -  - - - - - - - - - - - -  - - - - - -
மாறா இயற்கைப் பாவை"[134]

"மாரி வண்மகிழ் ஓரி கொல்லிக்
கலிமயிற் கலாவத்து"[135]

"- - - - - -  - - - - - - ஓரி
பல்பழப் பலவின் பயங்கெழு கொல்லிக்
கார்மலர் கடுப்ப நாறும்"[136]

சங்ககால மக்கள் இயற்கையோடு ஒன்றி வாழ்ந்ததோடு இயற்கையை வணங்கியும் மகிழ்ந்தனர். இயற்கையை மனித வாழ்வோடு இணைத்துப் பாடும் வழக்கம் இயல்பாகவே இருந்தது. அதனாலேயே புலவர்கள் காதல், வீரம், கொடை முதலியவற்றைப் பாடினாலும் இயற்கை வருணனை நிரம்பப் பாடியுள்ளனர்.

பாவை என்ற சொல்லுக்குப் பெண் என்று ஒரு பொருள் உண்டு. கொல்லிமலையின் உச்சியில் அழகொழுக மிளிரும் கொல்லிப் பாவையைப் பற்றிப் பரணர், கடவுளால் எழுதப்பட்ட மிக்க அழகுவாய்ந்த இக்கொல்லிப்பாவை

தன்னைக் காண்பவர்களைத் தன் சிரிப்பழகால் மயக்கிக் கொல்லும் திறம் வாய்ந்ததாகும் என்று குறிப்பிட்டுள்ளார்.

ஓரி வள்ளலினுடைய இக்கொல்லிமலை, பிறகு சேரமன்னன் பொறையனுக்கு உரிமையுடையதாகியிருந்தது. இக்கொல்லிப் பாவையைப் பற்றி நம்பத்தக்க பல கருத்துகள் இருந்தாலும் அதற்கு மாறாக,

> "தமிழகத்தில் உள்ள செல்வாக்குடைய கோயில்களுக்கும், மூதூர்களுக்கும் வடமொழிவாணர் புராணம் புனைந்து புணர்ந்த போது இக்கொல்லிப் பாவைக்கும் புராணம் புனைந்துள்ளனர்"[137]

என்று கூறுவது சிந்திக்கத்தக்கதொன்று.

**இமயமலை**

வானைமுட்டும் அளவிற்கு உயர்ந்து ஒரு பாதுகாப்பு அரணாக விளங்கும் இம்மலை, இந்தியாவின் வடவெல்லையாகக் குறிப்பிடப்பெற்று ஆரியர் நிறைந்து வாழும் புகழையுமுடையது. சங்க காலத்திலேயே பரணர் இம்மலையைப் பற்றியதான பல குறிப்புகளைத் தம் பாடல்களில் தந்துள்ளார்.

முனிவர்கள் இருந்து தவஞ்செய்யும் இடமான இம்மலையில் உள்ள உயர்ந்த சிகரங்களானது பொன்னின் துகள் பொருந்தி இருப்பதாகக் குறிப்பிட்டு உள்ளார் பரணர். மேலும் இமயமலையில் கடவுளர் விரும்பி உறைவதையும், அரமகளிர் வாழ்தலையும், ஏராளமான அன்னப்பறவைகள் வந்து தஞ்சம் புகுவதையும், இம்மலையில் யானைகள் மிகுதியாகக் காணப்படுவதையும் பரணர் பாடியுள்ளார்.

> "பாடாண்
> றெழிலி தோயு மிமிழிசை யருவிப்
> பொன்னுடை - - - - - - - - - - -"[138]

"நிலம்தாழ் மருங்கின் - - - - - - - - - - -

- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - அன்னம்

வான்அர் மகளிர்க்கு மேவல் ஆகும்"[139]

என்ற பாடலடிகள் மேற்கூறியமைக்குக் காட்டாகும்.

**ஏழில்மலை**

பரணரால் குறிப்பிடப்பெற்ற ஏழில்மலை நன்னனுக்கு உரிமையுடையதாகும். இம்மலையில் சிறந்த மயில்கள் வாழ்ந்திருந்ததையும் அறியமுடிகிறது.

"- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - நன்னன்

ஏழில் நெடுவரைப் பாழிச் சிலம்பு"[140]

என்பது பரணரின் பாடலடிகள்.

**கவிரம்**

"ஆஅய் தெனாஅது நன்நாட்டு - - - - - - - - - - -

கவிரம் பெயரிய உருகெழு அவா"[141]

என்னும் அடிகளிலிருந்து, இ.்.து ஆய் என்பவனது பொதியில் மலையின் நடுவில் இருந்தது தெரியவருகிறது.

**பொதியில்**

"ஒளிறுவேற் றானைக் கடுந்தேர்த் திதியன்

- - - - - - - - - - - - - - - - - - - - - - -

புகலரும் பொதியில் போல"[142]

என்று பரணர் இம்மலை திதியனுக்குரியது என்று குறிப்பிட்டுள்ளார்.

**பறம்பு**

இம்மலை நன்னன் என்பானுடையதாகும்.

"நன்னன் பறம்பில் - - - - - - - - - - - -

சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய

கற்போல் நாவினே னாகி"[143]

என்னும் அடிகளில், பரணர் பறம்பு மலையைப் பற்றி விளக்கம் தந்துள்ளார்.

**வேங்கை மலை**

அதிகனுக்குரிய இம்மலையில் மிகுதியான பயன் விளைவிக்கக் கூடிய பலாமரம் இருந்ததையும், இம்மலையில் உயர்ந்த அருவிகளும், சூரரமகளிர் வாழ்ந்திருந்த குறிப்பும் காணப்படுகின்றன.

"அதிகன்
- - - - - - - - - - - - பயங்கெழு பலவின்
வேங்கை சேர்ந்த வெற்பகம் பொலிய
சூரரமகளிர் - - - - - - - - - - - -"[144]

**ஆறுகள்**

நாடுகளையும், மலைகளையும் தம் பாடல்களில் பாடியுள்ள பரணர், ஆறுகளைப் பற்றியும் பாடியுள்ளார். இவற்றில் பரணரால் காவிரியாறொன்றே சிறப்பாகப் பேசப்படுகிறது. இக்காவிரியாற்றைப் பற்றி,

> "இவள் பிரமன் மனத்திருந்து கவேரனுக்குப் புத்திரியாய் நதியுருவடைந்தவள். இவள் அகத்தியரை மணந்தாள். அகத்தியர் வரத்தால் எல்லாத் தீர்த்தங்களும் வணங்கும் வரம் அடைந்து, அகண்ட காவிரி எனப்பெயர் பெற்று, உலகத்தார் பாபங்களைப் போக்குபவள். அகத்தியர் சுரமண்டலத்திலிருந்த போது இவளை இந்திரன் வேண்டுகோளால் விநாயகர் காகவுருக்கொண்டு உருட்ட நதியுருவாய்ப் பிரவகித்தனள். கன்னி, காவிரிப்பாவை, நீர்ப்பாவை, சோழர்குலக்கொடி, தமிழ்ப்பாவையெனவும் பெயர் வழங்கும்"[145]

என்று புராண கதை ஒன்று கூறப்பட்டுள்ளது. ஓடக்கோலும் நிலை பெறாமைக்குக்காரணமான பெருவெள்ளத்தினைக் கொண்ட இக்காவிரியாற்றின் சிறப்பினையும், வளத்தையும் பரணர் மிக அழகாக எடுத்துக்காட்டியுள்ளார்.

காவிரியாற்றில் அமைந்துள்ள மத்தி என்பவனுக்குரிய, கழார்த் துறையில் ஆட்டனத்தியின் அழகினைக் கண்டு மயங்கியே, அவனை காவிரி கவர்ந்துகொண்டுவிட்டது என்று கற்பனைச் சுவை பொங்கப் பாடுகின்றார் பரணர்.

"கழைநிலை பெறாஅக் காவிரி"[146]

"கழாஅர்ப் பெருந்துறை விழவி னாடும்
ஆட்டன் அத்தி ------ ------
காவிரி வவ்வலின்"[147]

"புனல் நயந்தாடும் அத்தி யணிநயந்து
காவிரி கொண்டொளிந் தாங்கு"[148]

# அடிக்குறிப்புகள்

1. குறு. 298 (5-7).
2. அகம். 208 (17-18).
3. மேலது, 372 (9).
4. குறு. 258 (2-7).
5. அகம். 196 (8-12).
6. மேலது, 152 (19-21).
7. மேலது, 266 (10-11).
8. குறு. 19 (1-3).
9. மேலது, 199 (2-4).
10. நற். 6(9-10).
11. மேலது, 265 (7).
12. அகம். 226 (13-17).
13. புலவர். டாக்டர்.இரா.வடிவேலன், சங்க காலக் கொங்கு நாடு, ப.113.
14. அகம். 135 (10-13).
15. நற். 100(7-9).
16. மேலது, 300 (10).
17. புறம். 348 (5).
18. அகம். 6 (1-5).
19. அகம். 122 (21-22).

20. மேலது, 152 (15-18).

21. மேலது, 142 (8-11).

22. மேலது, 152 (12-13).

23. நற். 265 (4-5).

24. குறு. 292 (2-5).

25. மேலது, 73 (2-4).

26. நற். 270 (7-10).

27. அகம். 326 (9-13).

28. மேலது, 152 (7-9).

29. புறம். 145 (1-3).

30. மேலது, 141 (10-13).

31. மேலது, 145 (5-10).

32. அகம். 322 (6-14).

33. மேலது, 6 (16-20).

34. மேலது, 356 (11-13).

35. மேலது, 356 (13-15).

36. குறு. 328 (5-8).

37. நற். 260 (6-7).

38. மேலது, 350 (4).

39. அகம். 222 (6-12).

40. அகம். 376 (4-11).

41. மேலது, 162 (16-18).

42. குறு. 393 (3-6).

43. பதிற்று. 44 (10-17).

44. அகம். 208 (10-12).

45. மேலது, 396 (1-6).

46. மேலது, 208 (14-18).

47. மேலது, 386 (3-8).

48. புறம். 63 (9-16).

49. மேலது, 4 (13-19).

50. அகம். 246 (8-14).

51. பதிற்று. 45 (6).

52. மேலது, 43 (7-11).

53. புறம். 369 .

54. பதிற்று. 48 (9-16).

55. மேலது, 45 (3-5).

56. மேலது, 45 (17-22).

57. குறு. 89 (4).

58. மேலது, 128 (2).

59. அகம். 62 (12-13).

60. குறள். 996 (பண்புடைமை).

61. புறம். 145 (1-3).

62. மேலது, 141 (10-11).

63. மேலது, 141 (3-9).

64. மேலது, 142 (1-6).

65. மேலது, 141 (14-15).

66. அகம். 262 (16-17).

67. பி.ஸ்ரீ, வீரத்தமிழகம், ப.217.

68. புறம். 152 (31-32).

69. குறு. 199 (2-4).

70. நற். 265 (7).

71. புறம். 127 (1-10).

72. அகம். 152 (19-23).

73. சிறுபாண். (96-99).

74. நற். 100 (7-9).

75. அகம். 162 (16-18).

76. குறள். 390 (இறைமாட்சி).

77. மேலது, 221 (ஈகை).

78. மேலது, 222 (ஈகை).

79. பதிற்று. 42 (13-14).

80. பதிற்று. 43 (25-36).

81. மேலது, 44 (3-6).

82. மேலது, 48 (1-2).

83. கவிஞர்.வைரமுத்து, வில்லோடு வா நிலவே, ப.121.

84. பதிற்று. 45 (13).

85. குறு. 298 (5-7).

86. அகம். 76 (3-5).

87. ஆ.சிவப்பிரகாச முதலியார், அபிதான சிந்தாமணி, ப.795.

88. புறம். 348 (5).

89. நற். 300 (9-10).

90. குறு. 19 (1-2).

91. அகம். 266 (11-14).

92. மேலது, (18-21).

93. டாக்டர்.கே.பகவதி, இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், ப.27.

94. அகம். 196 (8-12).

95. மேலது, 246 (8-14).

96. குறு. 258 (7).

97. அகம். 181 (15-17).

98. மேலது, 326 (3-5).

99. நற். 350 (1-5).

100. நற். 260 (7).

101. அகம். 266 (11-14).

102. டாக்டர்.கே.பகவதி, இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், ப.59.

103. அகம். 352 (9-10).

104. மேலது, 122 (21-22).

105. மேலது, 226 (13-14).

106. ஆ.சிவப்பிரகாச முதலியார், அபிதான சிந்தாமணி, ப.262.

107. அகம். 6 (3-4).

108. புறம். 348 (1-6).

109. அகம். 6 (16-20).

110. மேலது, 376 (3-4).

111. மேலது, 122 (5-8).

112. மேலது, 135 (12-13).

113. டாக்டர்.பொ.அ.துரை.அரங்கசாமி, சங்க காலச்சிறப்புப் பெயர்கள், ப.338.

114. குறு. 328 (5-8).

115. நற். 280 (6-9).

116. டாக்டர்.கே.பகவதி, இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், ப.224.

117. சிலம்பு. (ஊர்காண் காதை), (6).

118. அகம். 116 (13-16).

119. குறு. 128 (1-3).

120. டாக்டர்.கே.பகவதி, இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், ப.180.

121. அகம். 266 (10-11).

122. நற். 265 (4-5).

123. அகம். 142 (9-11).

124. மேலது, 258 (1-3).

125. மேலது, 372 (1-5).

126. மேலது, 396 (2-3).

127. சிலம்பு. (நாடுகாண் காதை உரை), ப.231.

128. அகம். 181 (20-22).

129. மேலது, 186 (16).

130. மேலது, 376 (18).

131. புறம். 343 (9-10).

132. குறு. 89 (4-6).

133. மேலது, 199 (2-4)

134. நற். 201 (5-11).

135. மேலது, 265 (7-8)

136. அகம். 208 (21-23).

137. மு.பாலகிருஷ்ணன், தமிழ் ஆராய்ச்சி வரலாறு, ப.242.

138. புறம். 369 (19-24).

139. நற். 356 (1-4).

140. அகம். 152 (12-13).

141. மேலது, 198 (13-15).

142. மேலது, 322 (8-14).

143. மேலது, 356 (8-10).

144. மேலது, 162 (8-25).

145. ஆ.சிவப்பிரகாச முதலியார், அபிதான சிந்தாமணி, ப.240.

146. அகம். 6 (6).

147. மேலது, 222 (5-8).

148. மேலது, 376 (10-11).

# இயல் - 2

## இலக்கியக்கூறுகள்

காலங்கடந்து நிலைபெற்று வாழும் பேரிலக்கியத்தை "உயர்தனி இலக்கியம்" என்பர். இவ்வகையான சிறப்புப் பெற்ற சங்க இலக்கியத்தில் இலக்கியச் சிறப்புக்குரிய சான்றுகளைப் பல்வேறு வடிவங்களில் காணமுடிகின்றது. இலக்கியம் என்பது பற்றி,

> "படிப்போர்க்கு இன்பம் தரும் வகையில் நுண்ணறிவு வாய்ந்த அறிஞர்கள் தம் உணர்ச்சிகளையும், கருத்துகளையும் முறைப்படுத்தி எழுதுவது இலக்கியமாகும்"[1]

என்ற ஸ்டாபுரூக் கருத்தை, தா.ஏ.ஞானமூர்த்தி தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

ஓர் இலக்கியத்திற்கு மெய்ப்பாடுகள், கற்பனை, வருணனை, உவமை போன்றவை இன்றியமையாக் கூறுகளாக அமைகின்றன. இக்கூறுகள் இலக்கியத்தின் இன்றியமையாப் பிரிவாகவும் திகழ்கின்றன.

சங்க இலக்கியங்களில், பரணர் பாடல்களில் இவ்விலக்கியக் கூறுகள் பெரும்பங்கு வகிக்கின்றன. பரணர் பாடல்களில் இடம் பெற்றுள்ள இலக்கியக் கூறுகளை,

1. உவமை
2. கற்பனை
3. வருணனை
4. உணர்ச்சி

என்னும் அடிப்படையில் குறுந்தலைப்புகளாக இப்பகுதியில் ஆராயப்படுகின்றன.

**1. உவமை**

எக்காலத்து இலக்கியமாயினும் அதனுடைய அழகை உணர்த்துவது உவமையே.

"உவமை" என்ற தமிழ்ச்சொல் 'உவமம்' என்றும் 'உவமானம்' என்றும் வழங்கப்படுகிறது. ஆங்கில மொழியில் இதனை "Simile" என்பர்.

உவமையின் பயனை இளம்பூரணர்,

> "புலன் அல்லாதன புலனாதலும் அலங்காரமாகிக்
> கேட்டார்க்கு இன்பம் பயத்தலும்"[2]

என இரண்டு என்பர்.

பகுத்தறியும் பண்பும், ஒப்புக்காணும் திறனும் ஒருங்கேப் பெற்ற மனிதன், இத்திறன்களை அவனுடைய அனைத்து வளர்ச்சிக்கும் அடிப்படையாகக் கொண்டிருந்தான்.

> "பண்புந் தொழிலும் பயனுமென் றிவற்றின்
> னொன்றும் பலவும் பொருளொடு பொருள் புணர்ந்
> தொப்புமை தோன்றச் செப்புவ துவமை"[3]

என்று உவமை பற்றித் **"தண்டியலங்காரம்"** கூறும்.

உவமையின் பல்வேறுபட்ட தன்மைகளையும் எடுத்துக்கூறியுள்ள தொல்காப்பியர், உவமையியலில் உவமமானது எதுபற்றி எழுதப்பட வேண்டும் என்பதனை,

> "வினைபயன் மெய்யுரு வென்ற நான்கே
> வகைபெற வந்த வுவமத் தோற்றம்"[4]

என்று கூறுகிறார். மேலும்,

"ஓசையின் இனிமையோடு செவ்விய சொற்களால் கூறப்படும் பொருள்களைச் சொல்லும் முறையால் அலங்கரிக்கும் திறமையே அணி"[5]

என்றும்,

"அழகில்லா உடலுக்கு அழகு சேர்க்கும் அணிகலன்கள் போலச் செய்யுள் வல்லார் கையாளும் சிலமுறைகள் அழகில்லாப் பேச்சுக்கு அழகு சேர்ப்பதால், அம்முறைகள் "அணி" எனப்பட்டன"[6]

என்றும் இப்படி அணியை அலங்கரிப்பர் திறனாய்வாளர்கள். அத்தகு சிறப்புவாய்ந்த அணிகளுள் ஒன்றான உவமையணி, மற்ற அணிகள் பிறப்பதற்கு இவ்வணியே அடிப்படையாக அமையும் காரணத்தால் உவமையணியைத் "தாயணி" என்று சிறப்பித்துக் கூறுவர்.

"சில உவமைகள் இன்று மிகப் பயின்று வழங்குவதால் புதுமையற்றுத் தோன்றலாம். ஆனால் சங்க இலக்கியத்தில் அவை காணப்படுமாயின், அப்பழங்காலத்தில் புலவர் புதியனவாகப் படைத்து வழங்கியது சிறப்பே ஆகும்"[7]

என்று கூறும் மு.வரதராசன் அவர்களின் கூற்றுக்கேற்பப் புலவர் பரணர் தம் பாடல்களில் தமக்கேவல்ல கவித்திறனுடன் உவமைகளை மிக அழகுடன் சிறப்பாகக் கையாண்டுள்ளார்.

பெண் என்பவள் மிகவும் மென்மையுடையவள் என்று அனைவரும் அறிந்த ஒன்றைத் தக்க உவமையால்,

"ஆற்றயல் எழுந்த வெண்கோட் டதவத்

தெழுகுளிர் மிதித்த ஒருபழம் போலக்

குழைய - - - - - - - - - - - - நாவே

காதலர் - - - - - - - - - - - -"[8]

என்று கொடியோர்களுடைய நாவுகளால் தூற்றப்பட்ட அலருக்குத் தலைவி குழைந்தமையை ஏழுநண்டுகளால் மிதிக்கப்பட்ட ஓர் அத்திப்பழம் குழைந்ததற்கு ஒப்புமை காட்டுகிறார் பரணர்.

மனித உயர்வு தாழ்வுகளை அஃறிணையோடு சார்த்திக் கூறுவது அடிப்படை உளவியலாகும். இவ்வாறு உயர்திணைக்கு அஃறிணையை உவமை கூறுவது மரபாகும்.

> "இயற்கைப் புனைவைத் துணையாகக் கொண்டு புலவர்கள் அறக்கருத்துகளையும், உள்ளுணர்வுகளையும் தம் பாடல்களில் சிலர் உள்ளவற்றை உள்ளவாறு புனைகின்றனர். சங்கப் புலவர்கள் கையாண்டுள்ள இயற்கை உவமைகளை நோக்கும் போது பயிரினங்கள், விலங்கினங்கள் முதலியவற்றின் இயல்புகளை அவர்கள் எத்துணை கூர்ந்து நோக்கி அறிந்திருந்தனர் என்பது பெறப்படும்"[9]

என்று இரா. சாரங்கபாணி கூறுவது எண்ணத்தக்கது.

தலைவனுக்குத் தூதாக வந்த பாணனை நோக்கித் தலைவி,

"கொக்கினுக் கொழிந்த தீம்பழங் கொக்கின்

கூம்புநிலை யன்ன முகைய ஆம்பல்

- - - - - - - - - - - -- - - - - - - - - - -

- - - - - - - - - - - - குன்றூர் அன்னவென்

நன்மனை நனிவிருந் தயரும்

- - - - - - - - - - - - - - - - - - - - - -"[10]

என்று கூறுகிறாள். இவ்வகப் பாடலில், மாங்கிளையில் கொக்கு வந்து அமர அதனைத் தாங்காது உதிர்ந்த மாம்பழம், கொக்கினது கூட்டம் போன்று உள்ள ஆம்பல் நிறைந்த குளத்திலே துடும் என வீழ்ந்தது. இதனைப் பரத்தமை காரணமாகச்சென்ற தலைவனை, தலைவி ஆமையின் முதுகிலே நத்தையைச் சுட்டு உடைத்துத் தின்னும் வேளிருடைய குன்றூர் போன்ற எனது நல்மனையில் வருகின்ற விருந்தினரைக் கைஒழியாது ஓம்பியதால் புலவேன் என்று கூறும் பாங்குமிக்க நயமுடையதாகும். தலைவனுக்குண்டான காமத்திற்கு உவமையாகப் புலவர்,

"மிகுபெயல்

உப்புச்சிறை நில்லா வெள்ளம் போல

நாணுவரை நில்லாக் காமம்"[11]

என்று தன் உயிரினும் சிறந்த நாணத்தின் எல்லையின்கண் தடைப்பட்டு நில்லாத பெரிய காமத்திற்கு, உப்பினாலே இடப்பட்ட அணையினால் தடைப்பட்டு நில்லாத பெரிய மழையால் உண்டான வெள்ளத்தை உவமையாகக் கூறியுள்ளமை மிக்க இயைபுடையதாகும்.

இதுபோன்ற அரிய உவமைகள் பரணர் செய்யுளிலேயே காணப்படுவது எண்ணுதற்குரியது.

தலைவி கூற்றாக வரும் பொருள்நயம் மிகுந்த கீழ்வரும் பாடலில், தலைவி தலைவன் மாட்டுக்கொண்டுள்ள காதலின் மிகுதியைக் கூறியிருக்கும் முறை மிக்க நயமுடையது ஆகும்.

"குறுந்தாட் கூதளி ஆடிய நெடுவரைப்
பெருந்தேன் கண்ட இருங்கை முடவன்
உட்கைச் சிறுகுடை கோலிக் கீழிருந்து
சுட்டுபு நக்கி யாங்குக் காதலர்
நல்கார் நயவா ராயினும்
பல்காற் காண்டலும் உள்ளத்துக் கினிதே"[12]

"முடவன் கொம்புத்தேனை விரும்பினது போல" என்னும் உவமை புலவர் பிறர் செய்யுட்களிலும் காணுமாயினும் "முடவன் கையைக் குடையாக வளைத்துத் தேனைச் சுட்டிக் கொண்டு நக்கி இன்புற்றது போல" என்பது போன்ற சிறப்புமிக்க கருத்துகளையும், நயத்தையும் தாங்கியுள்ள உவமைகள் பரணரது செய்யுளிலே காணக்கிடப்பது சிறப்புடைய ஒன்றாகும்.

> "உவமை அறியாத செய்தியை அறிவிக்கும் நோக்கத்தோடு எழுந்ததாகலின் தெரிவிக்க வேண்டியதனைத் தெளிவாகத் தெரிவிக்க நன்கறிந்த வரலாற்று நிகழ்ச்சிகளை உவமையாகக் காட்டும் ஒரு மரபைச் சங்கப் புலவர்கள் கையாண்டுள்ளனர்"[13]

என்ற டாக்டர் அர.சிங்காரவடிவேலன் என்பாரின் கூற்று பரணருக்கு மிக்க பொருந்தும்.

களவொழுக்கத்துக்கு உடன்படாத தாயைக் கண்ட தலைவி சினம் கொண்டவளாய்,

"பெண்கொலை புரிந்த நன்னன் போல
வரையா நிரயத்துச் செலீஇயரோ அன்னை"[14]

என்று வெகுண்டு கூறுகின்றாள். பெண் என்றால் இரங்காதோர் எவருமிலர். ஆனால் மாறாக, நன்னன் என்பானது நறிய மாமரத்தின் கனி ஆற்றில் விழ, அக்கனியை எடுத்துப் பெண் ஒருத்தி தின்ற கொடுமைக்காக நன்னன் அவளை கொலை செய்து முடிவிலே நரகத்தை அடைந்தது போல, நம் தாயும் நரகத்தை அடைந்து துன்புற வேண்டும் என்பதே இதன் குறிப்பு.

இப்பாடல் வழி பரணரது நெஞ்சத்துணிவும், அஞ்சாவியல்பும் நன்கு விளங்கும். மேலும், நன்மை செய்து நரகத்தைத் தவிர்க்க உலகத்தாருக்கு அறிவித்த புலவரது நல்நோக்கம் மகிழ்தற்குரியது.

இதுபோன்ற வரலாற்று நிகழ்ச்சியைக் கொண்டுவரும் வரலாற்று உவமைகளில் மற்றொன்று,

வினை காரணமாகப் பிரிந்து சென்ற தலைவன் ஒருவனை நினைத்து வருந்தும் தலைவி, அவன் வரவையறிந்து மிக்க மகிழ்ச்சியுடையவளாய் இதுவரை தன்னை வாட்டிய வாடையை நோக்கி,

"பெருவளக் கரிகான் முன்னிலைச் செல்லார்
சூடா வாகைப் பறந்தலை யாடுபெற
வொன்பது குடையு நண்பக லொழித்த
பீடின் மன்னர் போல
வோடுவை மன்னால் வாடைநீ யெமக்கே"[15]

என்று பெருமிதம் பொங்கக் கூறுகிறாள்.

தலைவனுடைய வருகைக் காலநீட்டிப்புக்குத் தலைவியை இதுமுதல் வருத்தச் செய்த வாடை மிரண்டு ஓடியமைக்குக் கரிகால் பெருவளத்தான்

என்னும் மன்னனிடம் வாகைப் பறந்தலைப் போரில் புறமுதுகிட்டோடிய ஒன்பதின்மரை ஒப்புமைக் காட்டியுள்ளார் புலவர்.

தம் பாடல்களில் எண்ணற்ற உவமைகளை அள்ளி வீசும் புலவர், புறச்செய்திகளை அகப்பாடல்களில் உவமையாகக் கூறும் புதுமையே தனிதான். இதுபோன்ற வரலாற்று உவமைகள் மட்டுமன்றி மரபுவமைகளும் இப்புலவருக்குக் கைவந்த கலையே.

ஐம்புலத்திற்கும் இன்பம் தருபவள் பெண்ணாதலின் ஐம்புல இன்பங்களுக்கும் களமாக விளங்கும் நகரங்கள் தலைவியின் நலத்திற்கு உவமையாய்ப் பரணர் பாடல்களில் மிகுதியாக இடம்பெற்றுள்ளன.

> "பெண்களைப் பற்றிய மரபுவமைகள் பொருட்புலப்பாட்டை நோக்கமாகக் கொள்ளாமல் உணர்ச்சி வெளிப்பாட்டை நோக்கமாகக் கொண்டவை"[16]

என்பது மரபுவமைக்குத் தகுந்த விளக்கமாகும்.

> "அழிசி ஆர்க்கா டன்ன இவள்
> பழிதீர் மாணலம்"[17]

என்னும் அடிகள், பெருமகன் அழிசி என்பவனுடைய ஆர்க்காட்டிற்குத் தலைவியின் அழகு கொழிக்கும் இளமையை ஒப்பிடுவதைக்காணும் பொழுது, பரணர் நகர் மீதும், புரவலர் மீதும் கொண்ட பற்று நன்கு விளங்கும்.

பரணர் போன்று தலைவியின் அழகுக்கு ஊர்களை (மரபு) உவமைகளாகக் கூறும் புலவர்களின் நோக்கத்தை,

> "அவர்களை ஆதரித்த புரவலர் மனம் மகிழவும், இதன் வாயிலாகத் தம் உள்ளம் களிக்கவும் இந்த முறைத் தகுந்த

வாய்ப்பினைப் புலவர்க்கு வழங்கியுள்ளது என்றும், அல்லது தாங்கள் பிறந்த ஊரைச் சிறப்பித்து மகிழ்வது புலவர்களின் நோக்கமாகவும் இருத்தல் கூடும் என்றும் நம்பப்படுகிறது"[18]

என்று கூறும் டாக்டர் மு.வரதராசன் கூற்றினை கதிர்மகாதேவன் எடுத்துக் காட்டுவது இங்கு நோக்கத்தக்கது.

பொதுவாகவே இலக்கியங்களில் வாழ்க்கையைப் புனையும் போது, அவை வாழ்க்கைச் சூழலாகிய இயற்கையைப் பின்புலமாகக் கொண்டுதான் அமையும். இந்த இயற்கை, உவமை வாயிலாக மனித வாழ்க்கையோடு சங்க இலக்கியங்களில் தொடர்புப்படுத்துகிறது. அத்தகு உவமைகளை "இயற்கை உவமைகள்" என்று பாகுபாடு செய்கின்றனர்.

"இயற்கை" என்றாலே முக்கியமாக இடம்பெறுவது அதில் பூத்துக் குலுங்கும் மலர்கள். இம்மலர்களை உவமைகளாகப் பாடுவதிலும் பரணர் விட்டுவைத்தாரில்லை.

"இலமல ரன்ன வஞ்செந் நாவிற்
புலமீக் கூறும் புரையோர்"[19]

என்ற அடிகளில் அறிவுடைமையாலே சிறந்த புகழ்மிக்க உயர்ந்தோருடைய சிவந்த நாவிற்கு, இலவம்பூவினை உவமை கூறிய பாங்கு மிக்க சிறப்புடையது ஆகும்.

தமிழர் தம் வாழ்வில் மலர்கள் இன்றியமையாத இடத்தைப் பெற்று இருந்ததைப் பாடல் வழி அறியமுடிகின்றது.

இத்தகைய சிறப்புடைய உவமைகளைத் தம் செய்யுட்களில் பாடிய புலவர் உட்பொருள் வைத்துக் கூறப்படும் உள்ளுறையைப் பாடுவதிலும் வல்லவராவார். புலவர் தம் மதிநுட்பத்தைக் காட்டும் உள்ளுறை உவமத்திற்கு,

"இது தான் வெளிப்படுத்தும் கருத்தை முந்திரி போல் முந்திக் கொண்டு புலப்படுத்தாமல் பலா, மாவின் கனிகளைப்போல் உள்ளடக்கிக் கொண்டிருக்கும். வெளிப்படையாகக் கூற இயலாத கருத்தையும் உள்ளுறைக் குறிப்பாற் கூறிவிடலாமாதலாலும், குறிப்பிற் புலப்படுத்துவதே அறிவின்பம் பயக்குமாதலாலும் புலவர்கள் உள்ளுறை முறையே அக இலக்கியங்களில் மேற்கொள்வாராயினர்"[20]

என்று விளக்கம் தருகிறார் டாக்டர் இரா.சாரங்கபாணி.

"உள்ளுறுத்து இதனோடு ஒத்துப்பொருள் முடிகென
உள்ளுறுத்து இறுவதை உள்ளுறை உவமம்"[21]

என்பது உள்ளுறைக்குத் தொல்காப்பியர் தரும் விளக்கம்.

பொதுவாக ஒருவனுடைய குறையை நேரடியாகச் சுட்டினால் மனிதமனம் எதிர்ப்புணர்ச்சி காட்டும். கதைபோல் கூறினால் வேறு யாரையோ சொல்வதாக நினைத்து, 'ஒக்கச் சிரித்தால் வெட்கமில்லை' என்ற பழமொழிப்படிச் சேர்ந்து சிரிக்கும். இக்கதை நெறியை மேற்கொண்டு கருத்தை மறைமுகமாகப் புலப்படுத்துவதை உள்ளுறை எனக் கொள்ளலாம்.

"கழுநீர் மேய்ந்த கருந்தா ளெருமை
பழனத் தாமரைப் பனிமலர் முனைஇத்
தண்டுசேர் மள்ளரி னியலி லயலது
குன்றுசேர் வெண்மணற் றுஞ்சும் ஊர
வெய்யை போல முயங்குதி"[22]

கழுநீர்ப்பூவினை மேய்ந்த எருமையானது தாமரைப் பூவினை வெறுத்துவிட்டுப் பின்பு அதனையும் வெறுத்துத் தண்டு சேர்ந்த வீரர்களைப் போலச் சென்று

பக்கத்திலுள்ள மணற்குன்றில் தங்கும். அத்தகைய ஊரனே என்று தலைவனை அழைப்பதிலிருந்தே அவன் இழிவினையுடையாளாகிய காதற் பரத்தையின் இன்பத்தைத் துய்க்கும் பொருட்டுத் தலைவியை வெறுத்துச் சென்று, காதற் பரத்தையின் இல்லிடத்தும் தங்காமல் சேரிப்பரத்தையினிடத்தில் தங்கியிருந்த உள்ளுறை இதன்மூலம் விளங்குகிறது. தோழி கூற்றாக வரும்,

"சிறுவீ ஞாழல் வேரளைப் பள்ளி

அலவன் சிறுமனை சிதையப் புணரி

குணில்பாய் முரசி னிரங்குந் துறைவன்"[23]

என்னும் பாடிலடிகள், நண்டினுடைய சிறுமனையைச் சிதைத்து அலைகள் அதனை வெளிப்படுத்தினாற் போன்று, தலைவன் தலைவி பற்றி ஊரில் எழுந்த அலரானது, இவ்விருவரின் களவை வெளிப்படுத்தித் திருமணத்திற்கு ஏதுவாக அமைந்தது என்னும் குறிப்புப் பொருளை உள்ளுறுத்திக் கவிதையைச் சிறக்கச் செய்து பரணரின் தனித்தன்மையை நன்கு விளக்குகிறது.

புலமைமிக்க பரணர் தம்முடைய பாடல்களில் இறைச்சி அமைத்தும் பாடியுள்ளார். இறைச்சிப் பற்றி,

"இறைச்சி தானே உரிப் புறத்ததுவே"[24]

என்று **"தொல்காப்பியம்"** கூறும்.

இதன் நேர்பொருளைக் காணும் பொழுது இறைச்சியாவது, கவிதையின் சொற்பொருளுக்குப் புறத்ததாய் இருக்கும் என்பது பெறப்படுகிறது. இறைச்சி என்பதற்குப் புதுவிளக்கமாக,

"இறைச்சி என்பது கருப்பொருள்களின் ஒரு பகுதியாகிய மான், ஆடு, மாடு முதலிய விலங்குகளையும் பறவைகளையும்

(அ.்.தாவது உயிரினங்களைப்) பெரும்பகுதி குறிக்கும். எனவே இறைச்சி என்பதற்குக் கருப்பொருள் எனவே விளக்குவர். இன்றும் ஆடு, கோழிக் கறிகளை "இறைச்சி" எனல் வழக்காறு"[25]

எனப் பொருள் தருகிறார் டாக்டர் தமிழண்ணல். புலவர் பரணரின் இறைச்சி அமைந்த பாடல் வருமாறு:-

"விளக்கின் அன்ன சுடர்விடு தாமரைக்
களிற்றுச் செவிஅன்ன பாசடை தயங்க
உண்துறை மகளிர் இரியக் குண்டுநீர்
வாளைபிறழும் ஊரற்கு- - - - - - - - - - - - -"[26]

வாளை மீனானது தாமரை மலர் துன்புற, நீராடும் மகளிர் அஞ்சி ஓட, பொய்கை நீரிற் பாய்ந்து துள்ளும் என்றதன் குறிப்பு, தலைவன் தலைவி வருந்த, காமக்கிழத்தியர் அஞ்சி அகல, புதியதாகப் புணர்த்திய பரத்தையிடத்துச் சென்று தங்கினான் என்னும் இறைச்சி இப்பாடலுள் அமைந்துள்ளமையைக் காணமுடிகின்றது.

## 2. கற்பனை

கற்பனை என்பது மனதிலே உண்டாகும் படைப்புக்கு ஓர் வித்தாகும். கலைஞன், தன் மனதில் உருவாகும் எண்ணங்களுக்குக் கொடுக்கும் உருவமே கற்பனையாகும். இதனை ஆங்கிலத்தில் "Imagination" என்று அழைப்பர். கற்பனை என்றால் என்னவென்பதை,

> "கற்பனை என்பது ஒரு கனவு. கற்பனையின் வழியாய் வெளிப்படுவதுதான் சிந்தனை. புலன்கள் நேரிடையாக ஒரு பொருளை நினைவுக்குக் கொண்டு வந்து நிறுத்தும் ஒருவகை ஆற்றலே கற்பனை"[27]

என்றும்,

> "எந்தப்பாடலும் யாதானும் ஒரு உணர்ச்சியைப் படிப்பவரின் உள்ளத்தில் எழுப்புதல் வேண்டும். இந்தப் பயனை சாதிப்பது எதுவோ அதுவே கற்பனை"[28]

என்றும் விளக்கம் தருகிறார் சோ.ந. கந்தசாமி.

கற்பனையில் வெறுங்கற்பனை எனப்படும் போலிக்கற்பனையை Fancy (or) Fantasy என்பர். இதில் வெறுங்கற்பனை என்பது பல உறுப்புகள் ஒன்று சேர்ந்து ஓர் இயந்திரம் ஆவது போன்றது. இயைபுக் கற்பனை என்பது, பாலும் தேனும் கலந்து அருந்தினால் உண்டாகும் இனிமையைப் போன்றது.

சங்ககாலப் புலவர்கள் இயற்கைக் காட்சிகளைத் தம் கற்பனை வளத்திற்குக் கருவியாகக் கொண்டனர். அவர்களது பாடல்களில் கற்பனை பெரும்பங்கு வகிக்கிறது. அத்தகைய கற்பனையைப் பற்றிக் க.கைலாசபதி,

> "நிகழாதது ஒன்றை நிகழ்ந்தது போலச்
> சிருட்டிப்பது கற்பனை"[29]

என்று கருதுகிறார். இதனையே மு.வரதராசன்,

> "கவிஞன் தான் உணர்ந்த உணர்ச்சியையோ, பெற்ற அழகின்ப அனுபவத்தையோ அல்லது கண்ட காட்சியையோ நாமும் முழுமையாகத் தெளிவாக அனுபவித்து இன்புறுமாறு அமைத்துக் காட்டும் அரிய கலைத்திறனே கற்பனை"[30]

என்று விளக்கம் தருகிறார்.

எனவே கற்பனை என்பது மனிதன் தேடிப்பெறும் அணிகலன் போன்றல்லாது, இயற்கையாகக் குழந்தைப் பருவத்திலேயே அமைந்துள்ள அழகுப்போன்றதாகும்.

ஓர் இலக்கியத்திற்குக் கருத்து, உணர்ச்சி, கற்பனை, வடிவம் என்ற நான்கும் இன்றியமையாதனவாகும். பொதுவாகக் கற்பனையைப் படைப்புக் கற்பனை, இயைபுக் கற்பனை, கருத்து விளக்கக் கற்பனை என்று பிரிப்பர். சங்க இலக்கியத்தில் நீங்காத இடத்தைப் பெற்றிருக்கும் புலவர் பரணர் பாடல்களில் இயைபுக் கற்பனை மிகுதியாக இடம்பெற்றுள்ளது.

புலவன் தான் கண்ட வேறுபட்ட இரு காட்சிகளை, ஒவ்வொன்றையும் விளக்கும் வகையில் இரண்டையும் இணைத்துப் புதியதாக ஒன்றைக் கூறுவது இயைபுக் கற்பனையாகும்.

அரண்மனையில் அரசி மிகவும் சினந்து இருந்ததையும், அவள் சினம் தணியும் பொருட்டு அரசியின் இளந்தோழியர் அவளை வணங்கிக் கை கூப்பியவாறு அவளைச் சூழ்ந்து நின்றதையும் கண்ட பரணர், மற்றொரு நாள் பொய்கை ஒன்றில் ஒரு பெரிய தாமரை மலர் இருக்க, அதனைச் சூழ்ந்து ஆம்பல் மலர்கள் குவிந்து கிடந்த மற்றொரு காட்சியினையும் கண்டார். தாம் கண்ட அரண்மனைக் காட்சியும், பொய்கைக் காட்சியும் தம் உள்ளத்தில் சில எண்ணங்களை எழுப்ப, சிவந்திருந்த தாமரைப்பூ பரணருக்குச் சினந்திருந்த அரசியாகவும், குவிந்திருந்த ஆம்பல் கை கூப்பியிருந்த தோழியாகவும் தோன்ற அக்கற்பனையால் விளைந்த பாடல்:

"சுடர்த்தொடிக் கோமகள் சினந்தென அதனெதிர்
மடத்தகை ஆயம் கைதொழுதா அங்கு
உறுகால் ஒற்றை ஒல்கி ஆம்பல்
தாமரைக்கு இறைஞ்சும் தண்துறை"[31]

காதலால் மனம் கலங்கியவர்கள் சிறிய துன்பம் என்றாலும் அதனைப் பொறுத்துக் கொள்ள மாட்டாது எல்லாம் தனக்காக வேண்டுமென்றே வருகிறது என்றெண்ணி அமைதியற்றுக் காணப்படுவர்.

தலைவனும் தலைவியும் ஒருவரையொருவர் மனம் விரும்பிக் களவொழுக்கத்தில் ஈடுபடுகின்றனர். இவர்களது களவொழுக்கத்தை அறிந்த தாய், தலைவியை எங்கும் செல்லாது தன் இல்லத்துக்குள்ளேயே அடைத்து வைக்கின்றாள்.

இதனை அறிந்த தலைவன், நன்னன் உதியன் என்னும் மன்னனுடைய கிட்டுதற்கரிய காவலையுடைய பாழி என்னுமிடத்தில், பண்டுகாலம் தொட்டு வழிவழியாக வந்த முதிர்ந்த வேளிர்குடி மன்னர்கள் பேணி வைத்துள்ள பொன்னைக் காட்டிலும் பெறுவதற்கு அருமை உடையவள் தலைவி என்று உரைப்பதாக வரும் இப்பாடலால் பரணரின் கற்பனைத் திறம் விளங்கும்.

"நன்னன் உதியன் அருங்கடிப் பாழித்
தொன்முதிர் வேளிர் ஓம்பினர் வைத்த
பொன்னினு மருமைநற் கறிந்து மன்னோள்
துன்னல மாதோ"[32]

மனம் பல பொருள்களைப் பற்றிய அறிவுப் பெறுகிறது. அந்த அறிவு திட்பமும், தெளிவும், வரையறையும், வளமும் உடையதாக வளர்வதற்குக் கற்பனை துணை செய்கிறது.

"குறுமகட்கு
எய்தச் சென்று செப்புநர்ப் பெறினே,
இவர் யார்? என்குவள் அல்லள்; முணாது
- - - - - - - - - - - - கொடுமூக்கு விளைகனி
- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -
இரும்பல் ஒலிவரும் கூந்தல் - - - - - - - - - - - -
பெரும்பேது உறுவள்யாம் வந்தனம் எனவே"[33]

குமிழ மரத்தின் வளைந்த மூக்கினையுடைய கீழே உதிர்கின்ற முற்றிய கனிகள் ஆங்கே குதித்து விளையாடுகின்ற இளமானுக்கு விரும்பி உண்ணும் உணவாகும் வல்வில் ஓரியினது காடுபோல, நல்ல வாசனையுடைய கரிய கூந்தலையுடைய தலைவியானவள் தன் வருகையை முன்னமே அறியப்பெற்றால் அடையும் மகிழ்வைத் தலைவன் தன் நெஞ்சிற்கு உரைத்தவை இவை.

இவ்வாறு அமையும் இயைபுக் கற்பனையைப் பற்றி மு.வரதராசன்,

> "இவ்வாறு உணர்ச்சி ஒற்றுமையால் இயைந்து அமைக்கப்படும் கற்பனை இயைபுக் கற்பனை எனப்படும்"[34]

என்று கூறியமை எண்ணத்தக்கதாகும். உலக வாழ்வில் கடவுள் படைத்த (இயற்கை) ஒவ்வொன்றும் இயல்பாகவே நடப்பது யாவரும் அறிந்த ஒன்று.

ஆனால், தலைவி ஒருத்தி அவ்வாறு இயல்பாக வானத்தில் விரியும் முழுநிலாவானது பகற்பொழுது போன்று ஒளிசெய்கின்றதை, தனக்கும் தலைவனுக்கும் இடையே நடக்கும் களவொழுக்கத்தை வெளிப்படுத்து வதற்காகவே இது இவ்வாறு இடையூறாகச் சுற்றித்திரிகிறது என்று கருதுமாறு கருத்து விளக்கக் கற்பனையில் புலவர் படைத்துள்ள இப்பாடல் மிக்க நயமுடையதாகும்.

> "பகலுறு வுறழ நிலவுக்கான்று விசும்பின்
> அகல்வாய் மண்டிலம் நிலவுவிரி யும்மே
> - - - - - - - - - - - - முட்டின்று நங் களவே"[35]

மத்தி என்பவனது கழாஅர் என்னும் நாட்டின் வளத்தைக் கண்ட புலவர் அதன் அழகைக் கற்பனை செய்யும் போது வெறுங்கற்பனை என்னும் அளவிற்குச் செல்லாமல் உள்ளம் விழைந்தவாறு அமைத்துக் காட்டுகின்றார். எடுத்துக்காட்டாக இப்பாடல்: -

"சுடர்ப்பூந் தாமரை நீர்முதிர் பழனத்
தந்தூம்பு வள்ளை யாய்கொடி மயக்கி
வாளை மேய்ந்த வள்ளெயிற்று நீர்நாய்
முள்ளரைப் பிரம்பின் மூதரிற் செறியும்
பல்வேள் மத்தி கழாஅர்"[36]

நெருப்புப் பிழம்புகள் போன்ற அழகிய தாமரை மலர்களையுடைய நீர் மிகுந்த பொதுநிலத்தில் படர்ந்துள்ள அழகிய உட்டுளை பொருந்திய நுண்ணிய வள்ளைக் கொடிகளை உழக்கித் திரிந்து, பின் வாளை மீனைப் பற்றித் தின்ற கூர்த்த பற்களையுடைய நீர்நாயானது, முட்கள் பொருந்திய அடிப்பகுதியையுடைய பிரம்பினது கொடிப்பிணக்கத்தினூடே புகுந்து உறைகின்ற வளமுடையது கழாஅர் என்னும் அவ்வூர்.

நீர்நாய்க்கு இந்த இன்பங்கள் எல்லாம் ஒரே முறையில் ஒருங்கே கிடைத்து இருத்தல் அரிது என்றாலும், இவையெல்லாம் நீர்நாய்க்குக் கிடைக்கக்கூடிய இன்பங்களே ஆதலின் இது வெறுங்கற்பனை ஆகாமல், பரணர்தம் உள்ளம் விழைந்த உண்மைக் கற்பனையாகவே அமைந்துள்ளது.

### 3. வருணனை

உள்ளதை உள்ளபடி நேரடியாகச் சொல்லும் அறிவியல் நூலின் கருத்து நடைக்கு முற்றிலும் மாறாக, மனங்கவரும் கலையழகு வாய்ந்தது வருணனை ஆகும். வருணனையைப் பற்றித் திறனாய்வாளர்கள்: -

> "புலவன் தான் சொல்லக்கருதிய பொருளை நேர்முகமாகக் கூறாது, வருணனை நயத்தோடு ஒருவாறு குறிப்பாகப் புலப்படுத்தி அமைக்கும் சொற்றொடர்களான இவை ஆங்கிலத்தில் "Tropes" என அழைக்கப்படும்"[37]

என்றும்,

> "புலன்களில் உணர்வனவற்றை அல்லது புலன்களின் வாயிலாக உணரும் புறக்காட்சிகளைச் சொற்களில் மொழிபெயர்த்துத் தருவதே வருணனை"[38]

என்றும் கூறுவர்.

சங்ககால மக்கள் இயற்கையோடு ஒன்றி வாழ்ந்தவர்கள். இவ்வியற்கையிலிருந்து பலவகைப் பயனையும் பெற்றனர். இயற்கையை நுகர்ந்த மக்களையும், இயற்கையினையும் ஒன்றுசேர்த்துப் பலவகைப் பாக்களை வடிவமைத்துப் பாடியுள்ளவர்களுள் குறிப்பிடத்தக்கவர் பரணர்.

டாக்டர் மு.வரதராசன் இயற்கையைப் பற்றிக் கூறும்போது,

> "எல்லாப் பாட்டுகளிலும் முதன்மையான நோக்கம் காதல், வீரம், கொடை முதலியவற்றைப் பாடுவதே, இயற்கையின் அழகு காதல் நிகழ்ச்சிக்கோ மற்ற நிகழ்ச்சிக்கோ பின்னணியாக வந்து இரண்டாம் இடமே பெறுகிறது. ஆயினும், அந்தப்பாட்டுக்களின் இயற்கை வருணனை மறக்க முடியாதவாறு நெஞ்சில் அழகுணர்ச்சியைப் பதியச் செய்கிறது. பிற்காலத்தார் அந்த வருணனைகளைப் போற்றித் தம் நெஞ்சத்தைப் பறிகொடுத்துள்ளனர் என்பது பல குறிப்புகளால் விளங்குகிறது"[39]

என்று தம் நூலில் **"சங்க இலக்கியம்"** என்னும் பகுதியில் குறிப்பிட்டுள்ளார்.

சங்கப்புலவர்கள் இயற்கையோடு வாழ்ந்த மக்களின் நிலையையும், வறுமை நிலையையும், செல்வச் செழிப்பில் வாழ்ந்தவர்களின் நிலையையும் இயற்கையுடன் ஒப்புமைப்படுத்தி பாடியுள்ளனர். இதனையே ஆய்வறிஞர் பெ.சு.மணி,

"இயற்கையோடு இயைந்த எளிமை அமைந்த சிற்றூர்களின் காதல் பாட்டுக்களும், செல்வ வாழ்வின் செழுமை வாய்ந்த கொடை பற்றிய பாட்டுக்களும் வாய்மொழி இலக்கியங்களாக விளங்கின என்றும், அந்த மக்கள் இலக்கியத்தையே அடிப்படையாகக் கொண்டு புலவர்களின் இலக்கியம் அமைந்தன என்றும் கொள்ளல் பொருந்தும்"[40]

என்று விளக்கியுள்ளார்.

இத்தகு சிறப்புமிக்க வருணனைகள் பரணர் பாடல்களில் சிறப்பிடம் பெற்றுள்ளன.

## அருவி வருணனை

தமிழகத்தில் எக்காலத்தும் நீர் வற்றாமல் வீழ்ந்து கொண்டிருக்கும் அருவிகளுள் ஒன்று கொல்லிமலை அருவி. இச்சிறப்பினைப் பெற்ற இவ்வருவிக்கு "ஆகாய கங்கை" என்ற சிறப்புப் பெயரும் உண்டு. சிறப்பு வாய்ந்த இக்கொல்லி மலை அருவியின் இயற்கை அழகினை நற்றிணையில் பரணர்,

"செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லித்
தெய்வம் காக்கும் தீதுதீர் நெடுங்கோட்டு
அவ்வெள் ளருவிக் குடவரை அகத்து"[41]

என்று பாடியுள்ளார்.

பழங்கள் நிறைந்த, தெய்வத்தாலே பாதுகாக்கப்பட்டு வருகின்ற, குற்றங்கள் நீங்கிய, உயர்ந்த சிகரங்களையும், அழகிய வெள்ளிய அருவியையும் உடைய கொல்லி மலைச் சாரல் என்பது இதன் பொருள். இப்பாடல் அடிகளின் மூலம் கொல்லிமலையின் இயற்கை வளத்தையும் சிறப்பையும் அறியமுடிகிறது.

### விலங்கு வருணனை

விலங்குகள் விரும்பி வாழும் இடம் மலைகள். இம்மலைகளின் அடர்ந்த காடுகளில் பலவிலங்குகள் உள்ளன. மலையில் யானை, புலி, கரடி, பன்றி, உடும்பு, குரங்கு போன்ற விலங்குகளும் சங்ககாலத்திலே இருந்திருக்கின்றன என்பதையும் பரணர் பாடல்வழி அறியப்படுகின்றது.

### மானைப் பற்றி

"அத்தக் குமிழின் கொடுமூக்கு விளைகனி

எறிமட மான்"[42]

என்றும்,

"இறுகுபுனம் மேய்ந்த அறுகோட்டு முற்றல்

அள்ளல் ஆடிய புள்ளி வரிக்கலை"[43]

என்றும் வரும் அடிகளில், குதித்து விளையாட்டயர்கின்ற இளமானையும், வரியையுமுடைய கலைமானையும் வருணித்திருப்பது மிக்க சிறப்புடையதாக உள்ளது.

### யானை பற்றி

சங்ககாலத்தில் போரில் யானைகள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை அறியப் பரணரின் பாடல் சான்றாகிறது.

"வெண்வேல்

களிறுகெழு தானைப் பொறையன் கொல்லி"[44]

என்று சேரமன்னனுடைய களிற்றுயானைப் படையை வருணித்திருக்கும் பாங்கு வியப்பிற்குரியது. இப்படை போர்தொறும் வெல்லும் சிறப்புடையது என்னும் குறிப்பும் இதனால் அறியப்படுகின்றது. பி.எல். சாமி என்பார்,

"சங்க இலக்கியத்தில் இருந்து யானை வாழும் இடம் ஈரம் நிறைந்த நிழலிலுள்ள காடுகளும், மலைச் சாரல்களும், குன்றுகளும், மூங்கிற் காடுகளும் என்று தெரிகிறது. விலங்கு நூலாரும் இதே சூழ்நிலையை விளக்கியுள்ளார்கள்"[45]

என்று கூறியிருப்பது இங்கு எண்ணுதற்குரியது.

**வேட்டை வருணனை**

காடுகளில் உள்ள விலங்குகளை வேட்டையாடுதல் ஒரு தொழிலாகவே உள்ளது. மலைகளில் வாழ்ந்த மக்கள் வேட்டையாடுதலில் பெரும்பொழுதைக் கழித்துள்ளனர். பேரரசர்கள், சிற்றரசர்கள் மற்றும் குறுநில மன்னர்கள் வேட்டையாடுவதற்காகவே சிறு படைகளுடன் காட்டிற்குச் செல்வதுண்டு. வேட்டையாடுதலையே தொழிலாகக்கொண்ட வீரர்களின் திறனைப் பற்றிப் பரணர்,

"- - - - - - - - - - - - புள்ளி வரிக்கலை

வீளை அம்பின் வில்லோர் பெருமகன்"[46]

என்று வேட்டையாடும் வீரனைக் காட்டுகின்றார்.

**மக்களின் வருணனை**

சங்கப் பாடல்களில் பெரிதும் இடம்பெறுவது அகமே. அவ்வகம் பற்றிய பாடல்கள் தலைவன் தலைவியைப் பற்றியும், அவர்களது களவு வாழ்க்கை, கற்பு வாழ்க்கை, பிரிவு நிகழ்ச்சிகள் ஆகியவை பற்றியும் பேசுகின்றன. இச்சங்க இலக்கியங்கள் இயற்கையை மறந்து மாந்தரையும், மாந்தரை மறந்து இயற்கையையும் காண்பதில்லை. இரண்டும் இணைந்து இரண்டறக் கலந்து வருவதனால் தான் இன்றுவரை சங்கச்செய்யுட்கள் நின்று நிலைத்திருக்கின்றன.

இவ்வருணனைக்குப் பொருத்தமாக இரா. சீனிவாசன்,

"தலைவியின் பற்கள், தோள்கள், கண்கள், வடிவு, சாயல், நறுமணம் முதலியன ஊர்களோடு சார்த்தப்பட்ட பொருள்களுக்கு உவமைப்படுத்தப்பட்டுள்ளன. அவ்வூர்ப் பெயர்கள் அரசர்களின் பெயர்களோடு சார்த்திக் கூறப்பட்டன. கொற்கை முத்து, கொல்லி மூங்கில், குடந்தை நீலம், கொற்கை நெய்தல், கொல்லி மயில், கொல்லிப் பாவை மற்றும் பல ஊர்களின் கானத்தின் நறுமணம் முதலியன இவற்றிற்கு உவமைகளாயின. இவ்வகையிலும், புறச் செய்திகள் அகப்பொருள் செய்திகளுக்கு உவமைகளாயின"[47]

என்று கூறியிருப்பது ஈண்டு பொருத்தமாக உள்ளது. இக்கருத்தின் முன் உதாரணமாகப் பரணர்,

"நீர்வளர் ஆம்பல் தூம்புடைத் திரள்கால்
நாருரித்து அன்ன மதனில் மாமைக்
குவளை அன்ன ஏந்தெழில் மழைக்கண்
திதலை அல்குல் பெருந்தோள், குறுமகள்"[48]

என்று பாடியுள்ளார். இப்பாடலில், தலைவியின் அழகிய மாமைநிறத்தையும், மேனி எழிலையும், குவளைபோன்ற அழகிய குளிர்ந்த கண்களையும், அழகிய தோள்களையும் வருணித்திருப்பது புலவரது புலமைக்குச் சான்றாக அமைகிறது.

இம்மாமை நிறத்தைக் குறித்து மு.வரதராசன்,

"தமிழ்நாட்டு மகளிரின் பொதுவான மேனிநிறம் கருப்பும் அன்று சிவப்பும் அன்று. கருமையும் செம்மையும் அழகுறக் கலந்த தனி நிறம் ஆகும். அந்த அழகிய நிறத்தை மாந்தளிரில் கண்ட முன்னோர் அதற்கு மாமை என்று பெயர் வழங்கினர்"[49]

என்று குறிப்பிட்டுள்ளார்.

**கால வருணனை**

காலங்களில் மாலைக்காலம் இனிமையும் மென்மையும் உடையது. உயிர் உள்ள பொருள்களும் உயிரில்லாத பொருள்களும் அக்காலத்திற் பலவகையான வேறுபாடுகளை அடைகின்றன. ஆயினும், தலைவனை விட்டுப்பிரிந்த மகளிர்க்கு அதன் இனிமை மிகுதியும் துன்பத்தையே விளைவிக்கின்றது. அவ்வளவு இனிமையானது மாலைக்காலம்.

இம்மாலைக்காலத்தைக் கண்டு மயங்கிய பரணர், அதன் இனிமையையும், மாலைக்கால நிகழ்ச்சிகள் பற்றியும் தம் பாடலில் அழகுற வருணித்துள்ளார்.

"இலங்குசுடர் மண்டிலம் புலந்தலை பெயர்ந்து
பல்கதிர் மழுகிய - கல்சேர் அமையத்து
அலந்தலை மூதேறு ஆண்குரல் விளிப்ப
புல்லென் மாலையும் இனிது மன்றம்ம"[50]

தன்னுடைய தலைவன் இல்லாது தனியே வருந்தும் தலைவி மான், காட்டுப்பூனை, கோழிச்சேவல் போன்றவற்றிற்கு இனிமையாக அமைந்த மாலைப்பொழுதின் இன்பம் தனக்கு கிட்டவில்லையே என்று துன்புற்று வருந்தும் இப்பாடலில், மாலைக்காலத்தை வருணித்திருப்பது படிப்பவரையும் அதன் இனிமைக்கே அழைத்துச் செல்வதாக உள்ளது.

**பனிக்காலம் பற்றி**

"இரங்கா முன்ன வரும்புமுதி ரீங்கை
ஆலியன்ன வால்வீ தாஅய் - - - - - - - - - - - -
- - - - - - - - - - - - குவளை போதுபிணி யவிழ
மைதோய் விசும்பின் மாதிரத் துழிதரப்
பனியடூஉ நின்ற பானாட் கங்குற்"[51]

என்ற பாடலடிகளில் பனிக்காலத்தின் மென்மையையும், இக்காலத்தில் இயற்கையாக நடைபெறும் நிகழ்ச்சிகள் பற்றியும் மிக அழகாக எடுத்துக் கூறியிருப்பது பரணருடைய இயற்கைப் பொருளறிவை நன்குப் புலப்படுத்தும்.

**பறவை வருணனை**

அழகிய பெண்களின் சாயலை வருணிப்பதில் மிகுதியான இடத்தைப் பெறுவது மயிலேயாகும். இதன் மேன்மையைக் கருதியே இம்மயிலை இந்நாட்டின் அடையாளப் பறவையாக உரிமைகொண்டு, பறவைகளுள் தலைமைச் சிறப்பும் அளித்திருக்கிறார்கள்.

"கொல்லிக்
கலிமயிற் கலாவத் தன்ன இவள்"[52]

என்னும் பரணரின் பாடலால் பறவைகளில் மிகவும் அழகுமிகுந்த மயிலின் சிறப்பை மேலும் அறியமுடிகின்றது.

**மரங்களின் வருணனை**

இயற்கை வருணனைப் பகுதியில் அகப்பொருள் கூறும் கருப்பொருள்கள் ஆக அமைவன மலர், மரம், புள், விலங்கு, நீர் என்பனவாகும். மரங்களால் அமைந்த காடுகள் இயற்கை வருணனையாக அமைவது பற்றி,

> "குறிஞ்சி வருணனை தரும் அகப்பாடல்கள் குறிஞ்சிக்குரிய புணர்தலையும், புணர்தல் நிமித்தத்தையும் மையமாகக்கொண்டன. எனவே குறிஞ்சிக்காடுகள் களவொழுக்கத்திற்குரிய பின்னணி ஆகப்பொருந்தின. குறிஞ்சி கருப்பொருள்கள் அகமாந்தர் தம் உணர்ச்சிகளைத் தூண்டவும் வெளியிடவும் துணைநின்றன"[53]

என்று கூறியுள்ளார் பி.எல். சாமி.

பரணர் பாடல்களில் மரங்களைப் பற்றி,

"கோளற வறியாப் பயங்கெழு பலவின்

வேங்கை சேர்ந்த வெற்பகம் பொலிய"[54]

"வாங்கு சினை மருத- - - - - - - - - - - - -"[55]

என்று வேங்கை, பலா, மருதம் போன்ற மரங்களை மிக அழகாக வருணித்து உள்ளார் பரணர்.

**மலர்களின் வருணனை**

தமிழ்ப்புலவர்களின் கண்ணையும் கருத்தையும் கவருபவை மலர்கள். காப்பியத்திலும் ஓவியத்திலும் கூட இம்மலர்களைக் காணமுடிகின்றது. இம்மலர்கள் புலவர்களின் நாவிலும் பாவிலும் தவழ்ந்து விளையாடின. அழகு மிகுந்த இம்மலர்களைப் பெண்களின் அழகுக்கு ஒப்பிட்டுப் பாடியுள்ள சங்கப் புலவர்களுள் பரணரும் ஒருவராவார். இயற்கையாக மணம் வீசுகின்ற மலர்களின் பெருமை உணர்ந்து இதனைப் பாடியுள்ள திறம் வியக்கத்தக்கதாகும்.

"பழனத் தாமரைப் பனிமலர் - - - - - - - - - - - -

முகை அவிழ் கோதை - - - - - - - - - - - -"[56]

"பொலம்பூந் தும்பை- - - - - - - - - - - -"[57]

"நரந்தம் நாறும் - - - - - - - - - - - -"[58]

"- - - - - - - - - - - - தண்ணறுங் காந்தள்"[59]

என்று இவ்வாறு கழுநீர், தாமரை, தும்பை, காந்தள் போன்ற மலர்களையும், நரந்தம் புல்லினையும் வருணித்திருக்கும் பாங்கு அம்மலர்களது அழகுக்கு மேலும் மெருகேற்றுவனவாக அமைந்துள்ளது.

**4. உணர்ச்சி**

உலகில் உள்ள ஒவ்வோர் உயிருக்கும் உணர்ச்சி இருப்பது மறுக்க முடியாத ஒன்று. இலக்கியத்தில் இவ்வுணர்ச்சி பெறுமிடத்தை,

> "உணர்ச்சியில் முகிழ்ப்பது கவிதை. படைத்த பாவலனின் உள்ளத்தெழும் உணர்ச்சி, அவன் படைக்கும் பாத்திரத்தின் உணர்ச்சி, அப்பாடலைப் படிப்பவரின் உணர்ச்சி இம்மூன்று நிலைகளிலும் தோன்றி ஒன்றுபடும் ஒன்றைத்தான் கலையுணர்ச்சி எனத் திறனாய்வாளர் மொழிவர்"[60]

என்னும் கூற்றிலிருந்து உணர்ச்சியின் முக்கியத்துவத்தை விளங்க முடிகிறது.

உலகத்தாருடைய உள்ளத்து நிகழ்ச்சி அவரது உடம்பில் வியர்த்தல், நடுக்கம் முதலியன போன்ற புறக்குறிகளால் காண்போர்க்குப் புலனாகும் தன்மை மெய்ப்பாடு எனப்படுகிறது. உணர்ச்சிகளின் வாயிலாகத் தோன்றும் இம்மெய்ப்பாடுகள் மெய்யின்கண் தோன்றுவதால் மெய்ப்பாடாயிற்று என்பர் தொல்காப்பியர். இதன் வகைகளாக,

> "நகையே அழுகை இளிவரல் மருட்கை
> அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்று
> அப்பால் எட்டாம் மெய்ப்பாடென்ப"[61]

என்று எட்டுவகை மெய்ப்பாடுகளைத் **"தொல்காப்பியம்"** உணர்த்தும்.

நொடிப்பொழுதில் தோன்றி மறையும் அல்லது சிலமணி நேரமே வாழும் உணர்ச்சி நிலைகளுக்குச் சாகாவடிவம் கொடுப்பதே பாட்டு என்ற சங்கப் புலவர்களின் கொள்கையைத் தொகை நூல்களில் உள்ள ஒவ்வோர் அமைப்பும் நினைவூட்டுகின்றது.

மனித வாழ்க்கையில் அவ்வப்போது திடுமெனத் தோன்றி மனித மனத்தை நிரப்பி அடிமை கொள்ளுகின்ற உணர்ச்சியை அது தன்னகத்தேயாயினும் பிறரகத்தாயினும் தோன்றும் போதே உணர்ந்து, அதற்குச் சொல் வடிவில் முழுமையான வாழ்வு தருவதே புலவனின் தொண்டாகும்.

நிலையற்றனவாய்த் தோன்றி மறையும் நொடிப்பொழுதளவு உணர்ச்சிகளுக்கு நிலையான கலைவாழ்வு தருவது புலவனின் நோக்கமாயுமுள்ளது.

இத்தகைய உணர்ச்சிகள் பரணர் பாடல்களில் சிறப்பிடம் பெறுகிறது.

"அபேத உணர்வின் பயனாய் எழும்

மாசற்ற உவகையின் மலர்ச்சி"[62]

என்று உவகை என்னும் மெய்ப்பாடு பற்றிக் கூறுவர். இம்மெய்ப்பாடு அமைய வரும் பரணர் பாடல்: -

"தொடிக்கண் வடுக் கொள முயங்கினள்

வடிப்புறு நரம்பிற் றீவிய மொழிந்தே"[63]

யாழ் நரம்பினின்றும் வடிக்கின்ற இன்னிசை போன்று இனிய மொழிகளையுடைய தலைவி, தலைவனை ஆரத்தழுவினமையால் அவனது காதல் நீங்காது நிலைத்திருத்தலின் தலைவனுக்குண்டான மகிழ்ச்சியின் பொருட்டு, இப்பாடலில் புணர்ச்சி பற்றிய "உவகை" அமைந்துள்ளது.

"மனம் என்பது பிறரால் காணமுடியாத மாயநிலையில் இருந்தாலும், அதில் எத்தனையோ குமுறல்களும், கொந்தளிப்புகளும் தோன்றிக் கொண்டே இருக்கின்றன. மனிதனது சூழலுக்கேற்ப அவை இன்பமாகவோ துன்பமாகவோ வெளிப்படுகின்றன"[64]

என்று தா.ஏ. சண்முகம் கூறுவார்.

தலைவியைப் பிரிந்து பரத்தையை நாடிச்சென்ற தலைவன் தலைவியிடத்து மீண்டு வந்து அவளது ஊடலைத் தவிர்க்க முயலும் போது, ஊடல் தீராத தலைவி பசப்பு மொழிகளைப் பேசும் தலைவனை நோக்கி,

"மாயப் பொய்ம்மொழி சாயினைப் பயிற்றி

எம்,முதுமை எள்ளல் அஃதமைகுந் தில்ல"[65]

என்று கூறும் பாடல் அடிகளில், தன்னிடத்தில் தோன்றிய மூப்புப் பொருளாகப் பிறந்த "இளிவரல்" என்னும் மெய்ப்பாடு அமைந்துள்ளது.

"குணகடற் திரையது பறைதபு நாரை

- - - - - - - - - - - - - - - - - - - - -

நோயை நெஞ்சே நோய்ப்பா லோயே"[66]

என்னும் குறுந்தொகைப் பாடலில், "கிட்டாதாயின் வெட்டென மறத்தலே அறிவு" என்னும் கூற்றுக்கேற்பத் தலைவியைத் தனது முயற்சியால் எய்தவியலாது தன் நெஞ்சினை வேறு நிறுத்திக் கூறியதனால் இவ்விடத்துப் பிறன்கண் தோன்றிய "வருத்தம்" என்னும் மெய்ப்பாடு காணப்படுகின்றது.

பொதுவாக மனிதனுக்கு இன்ப உணர்ச்சியே முதன்மை உணர்ச்சியாகக் கருதப்படுகின்றது. இவ்வுணர்ச்சியே அவனது அகப்புற இயக்கங்களுக்கு அடிப்படையான ஆற்றலாகிறது. அவனது இன்பத்திற்கு தடையாகப் பல சமூகக் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டாலும் அஃது அவனைவிட்டு நீங்குவதில்லை.

"அணிகிளர் சாந்தி னம்பட் டிமைப்பக்

கொடுங்குழை மகளிரின் ஒடுங்கிய இருக்கை"[67]

பரத்தை காரணமாகப் பிரிந்து சென்ற தலைவன் மீண்டும் தலைவியினிடத்தில் வரும் போது தலைவியின் முன் செல்ல அஞ்சியவனாய் தன் தவற்றிற்குத் தானே நாணி அவள் அறியாத வண்ணம் மறைந்து கொண்டான்.

தலைவன் வந்ததை அறிந்தும் அவனுக்கு முகங்கொடாளாய், இல்லத்துக்குள் சென்ற தலைவி மீண்டும் வந்து தலைவனைத் தேடிக் காணப் பெறாமையினால், தனது மடமைக்குப் பெரிதும் வருந்தி ஏங்குகின்ற சுவைமிகக்

கொண்டுள்ள இப்பாடலில் புலவிப் பொருளாகப் பிறந்த "அச்சம்" என்னும் மெய்ப்பாட்டினைக் காணமுடிகின்றது.

"ஒருவனது நாட்டத்தின் அளவுக்கும் உண்மைத் திறனுக்கும் வேறுபாடு அதிகம் இருப்பின் அவன் மனமுறிவுப் பெறுகிறான்"[68]

என்று தா.ஏ. சண்முகம் கூறிய கூற்றுக்கு ஏற்ப, நற்றிணையில் "நகை" மெய்ப்பாட்டினைக் காணக்கூடிய அடிகள்: -

"உள்ளுதொறும் நகுவேன் தோழி

- - - - - - - - - - - - - - - - - - - - - -

நன்னராளன் நடுங்கஞர் நிலையே"[69]

தன்னிடத்தில் தலைவன் நிகழ்த்திய பூசலைத் தலைவியினிடத்தில் கூறுவேன் என்ற அளவிலேயே அவனுக்கு உண்டான நடுக்கத்தைக் குறித்துப் பரத்தை நகையாடுவதால் இப்பாடல் எள்ளல் பொருளாகத் தோன்றிய "நகை" என்னும் மெய்ப்பாடு கொண்டு அமைந்துள்ளது.

இதுபோன்ற உணர்ச்சிகளின் ஊற்றாய் அமையும் அகப்பாடல்கள் மட்டுமல்லாமல் புறப்பாடல்களிலும் உணர்ச்சி ததும்ப பாடியுள்ளார் பரணர்.

"வாள் வலந்தர மறுப்பட்டன"[70]

என்னும் புறநானூற்றடி, சோழன் உருவப்ப..ஃறேர் இளஞ்சேட் சென்னியினுடைய வாள்பெருமையைப் பெருமிதச் சுவை பொங்க எடுத்துக் கூறியுள்ளதிலிருந்து, தறுகண் பொருளாகப் பிறந்த "பெருமிதம்" என்னும் மெய்ப்பாடு தோன்றுவதைக் காணமுடிகிறது.

"நற்பண்புகளே இலக்கியத்திற்குரிய உணர்ச்சிகளை நம்முள் எழுப்புகின்றனவேயன்றி அவற்றிற்கு காரணமான துன்பங்கள் அல்ல"[71]

என்று தா.ஏ. ஞானமூர்த்தி நற்பண்பின் உறைவிடம் உணர்ச்சி என்று வடிக்கிறார். இதற்கு உரிமையுடையதான கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனைப் பற்றிப் புகழ்ந்து பாடிய பரணர் அம்மன்னனது வெற்றிச் சிறப்பினை உணர்வு மேலிட எடுத்துக்காட்டுகிறார்.

"மன்னர்

இனியாருளரோ நின் முன்னும் இல்லை

மழைக்கொளக் குறையாது புனல்புக நிறையாது

விலங்குவெளி கடவுந் துளங்கிருங் கமஞ்சூல்

வயங்குமணி இமைப்பின் வேலிடுபு

முழங்குதிரைப் பனிக்கடல் மறுத்திசி னோரே"[72]

செங்குட்டுவனுடைய வெற்றி, வீரம் போன்றவை இவனுக்கு நிகராக இவனது முன்னோருள் எவரும், இவனுக்கு ஒப்பானவர்கள் இலர் என்று உணர்ச்சி ததும்ப பாடியுள்ள இப்பாடலில் , "மருட்கை" என்னும் மெய்ப்பாடு காணப்படுகிறது. இது புதுமைப்பொருளாகப் பிறந்த மருட்கையும் ஆகும்.

பண்பாடு பற்றிக் கூறவந்த மு.வரதராசன் உணர்ச்சியின் இன்றியமையாமையை,

"வாழ்க்கையின் உணர்ச்சி எல்லாம்

பாட்டாக மலர்வது தமிழகப் பண்பாடு"[73]

என்று கூறுவதிலிருந்து வாழ்க்கையில் உணர்ச்சியின் பங்கையும் அறியமுடிகிறது.

"என்னா வதுகொல் தானே

- - - - - - - - - - - - - - - - - - - - - - - -

காமர் கிடக்கை அவரகன்றலை நாடே"[74]

என்று "அழுகை"ச் சுவை தோன்ற அமைந்துள்ள பாடல் சிறப்புமிக்க உணர்ச்சிகளுக்குக் காட்டாக அமைகின்றது.

# அடிக்குறிப்புகள்

1. தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல், ப.47.
2. தொல். (பொருளதிகாரம்), உவமையியல், முன்னுரை.
3. திரு.கொ.இராமலிங்கத் தம்பிரான் (உ.ஆ.), தண்டியலங்காரம், ப.38.
4. தொல். (உவமையியல்) நூற்.1.
5. கே.இராஜகோபாலாச்சாரியார், இலக்கண விளக்கம், ப.18.
6. டாக்டர். அர.சிங்காரவடிவேலன், சங்க இலக்கிய உவமைகள், ப..108.
7. டாக்டர்.மு.வரதராசன், நற்றிணைச் செல்வம், ப.84.
8. குறு. 24 (3-5).
9. இரா.சாரங்கபாணி, இயற்கை விருந்து, ப.3.
10. நற். 280 (1-10).
11. அகம். 208 (18-20).
12. குறு. 60 (1-6).
13. டாக்டர். அர.சிங்கார வடிவேலன், சங்க இலக்கிய உவமைகள், ப.186.
14. குறு. 292 (5-6).
15. அகம். 125 (18-22).
16. டாக்டர். அர.சிங்கார வடிவேலன், சங்க இலக்கிய உவமைகள், ப.68.
17. குறு. 258 (7-8).
18. கதிர் மகாதேவன், ஒப்பிலக்கிய நோக்கில் சங்ககாலம், ப.13.
19. அகம். 142 (1-2).

20. இரா.சாரங்கபாணி, இயற்கை விருந்து, ப.68.

21. தொல். (அகத்திணையியல்) நூற்.51.

22. நற். 260 (1-5).

23. குறு. 328 (1-3).

24. தொல். (பொருளியல்) நூற்.225.

25. டாக்டர்.தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு, ப.68.

26. நற். 310 (1-4).

27. சோ.ந.கந்தசாமி, குறுந்தொகைத் திறனாய்வு, ப.22.

28. மேலது.

29. க.கைலாசபதி, இலக்கியமும் திறனாய்வும், ப.35.

30. டாக்டர்.மு.வரதராசன், இலக்கியத் திறன், ப.67.

31. நற். 300 (1-4).

32. அகம். 258 (1-4).

33. நற். 6 (4-11).

34. டாக்டர்.மு.வரதராசன், இலக்கியத் திறன், ப.148.

35. அகம். 122 (10-11,23).

36. மேலது, 6 (16-20).

37. டாக்டர் பொ.அ.துரை.அரங்கசாமி, சங்ககாலச் சிறப்புப் பெயர்கள், ப.50.

38. டாக்டர்.மா.இராமலிங்கம், புதிய உரைநடை, ப.120.

39. டாக்டர்.மு.வரதராசன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.38.

40. பெ.சு.மணி, சங்ககால ஔவையாரும் உலகப்பெண்பாற் புலவர்களும், ப.224.

41. நற். 201 (5-7).

42. மேலது, 6 (7-8).

43. மேலது, 265 (1-2).

44. அகம். 62 (12-13).

45. திரு.பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம், ப.83.

46. நற். 265 (1-3).

47. இரா.சீனிவாசன், சங்க இலக்கியத்தில் உவமைகள், ப.201.

48. நற். 6 (1-4).

49. டாக்டர்.மு.வரதராசன், நற்றிணைச் செல்வம், ப.70.

50. அகம். 367 (1-13).

1. மேலது, 125 (3-11).

நற். 265 (7-8).

திரு.பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம், ப.83.

அகம். 162 (19-20).

. 350 (3).

லது, 260 (1-2, 8-9).

ற்று. 45 (1)

ம். 266 (4).

59. குறு. 259 (2-4).

60. சோ.ந.கந்தசாமி, குறுந்தொகைத் திறனாய்வு, ப.19.

61. தொல்., பொருளதிகாரம் (மெய்ப்பாட்டியல்), நூற்.247

62. கே.இராஜகோபாலாச்சாரியார், இலக்கண விளக்கம், ப.21.

63. அகம். 142 (25-26).

64. தா.ஏ.சண்முகம், உளநலவியல், ப.40.

65. அகம். 6 (14-15).

66. குறு. 128 (1-5).

67. அகம். 236 (11-12).

68. தா.ஏ.சண்முகம், உளநலவியல், ப.54.

69. நற். 100 (1,12).

70. புறம். 4 (1).

71. தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல், ப.75.

72. பதிற்று. 45 (17-22)

73. டாக்டர்.மு.வரதராசன், மாதவி, ப.67.

74. புறம். 63 (11,15).

# இயல் - 3

## யாப்பமைதி

பொதுவாகவே ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு தனித்திறமை உண்டு. அவரவர் தத்தம் திறமைகளில் தழைத்தோங்கி நிற்பர். வேற்றுமொழிச் செல்வாக்கும், பாதிப்பும் இல்லாத செந்தமிழ்ப் பாடல்களைக் கொண்ட சங்க இலக்கியத்தில் பரணரின் தனித்தன்மை குறிப்பிடத்தக்கது.

பரணர் தம்முடைய ஒவ்வொரு பாடலிலும் வரலாற்றுச் செய்திகளைக் குறிப்பிட்டுப் பாடியிருப்பினும் மொழிநடையில் தூய்மையும் ஓசை நயமும் பயின்று, சொற்பொருள் நயங்கள் அமைந்துவரப் பாடியுள்ள திறம் போற்றுதற்குரியது.

### யாப்பு நயம்

யாப்பு என்பதற்குக் கே. இராஜகோபாலாச்சாரி,

> "செவ்விய சொற்களால் உயரிய விஷயங்களைக் கொண்ட இலக்கியப் படைப்பிற்கு ஓசை நயத்தை ஊட்டுவது யாப்பு"[1]

என்று கூறுகிறார்.

இக்கூற்றுக்குப் பொருத்தமாகப் பரணர், செவ்விய சொற்களால் தொடை விகற்பங்கள் அமையப் பாடியுள்ளார்.

> "எழுத்தசை சீர்தளை அடிதொடை தூக்கோடு
> இழுக்கா நடைய தியாப்பெனப் படுமே"[2]

ன்று யாப்பிற்கு விளக்கம் தருகிறார் அமிதசாகரனார்.

### தொடை

> "தொடையே அடியிரண் டியையத் தோன்றும்"[3]

என்னும் நூற்பாவானது, தொடை என்பது அடி இரண்டு இயைந்த வழிப் பெறப்படும் என்று கூறுகிறது. தொடையின் வகைகளாக,

"மோனை எதுகை முரணியை யளபெடை
பாதம் இணையே பொழிப்போ டொரூஉத்தொடை
கூழை கதுவாய் மிசையதூஉம் கீழதுஉம்
சீரிய முற்றொடு சிவனுமார் அவையே"[4]

என்று வகைப்படுத்துகிறது யாப்பருங்கலம்.

பரணர் பாடல்களில் அமைந்துள்ள தொடை விகற்பங்கள்:-

## மோனைத் தொடை

அடிதோறும் முதல் எழுத்து ஒன்றி வருவது அடிமோனைத் தொடை ஆகும்.

"மாசில் கற்பின் புதல்வன் றாயென
மாயப் பொய்ம்மொழி சாயினை பயிற்றியெம்"[5]

பரணரின் இவ்வடிகளில், அடிதோறும் முதல் எழுத்து ஒன்றி வந்து அடிமோனைத் தொடை அமைவதைக் காணமுடிகிறது.

ஒரே அடியில் அமையும் சீர்மோனை வகைகளும் பரணர் பாடல்களில் பயின்று வந்துள்ளன.

## இணை மோனை

"சேரி சேர மெல்ல வந்துவந்து"[6]

என்னும் அடியில், முதல் இரண்டு சீர்களிலும் முதல் எழுத்து ஒன்றி வந்துள்ளது. இ∴து இணைமோனை எனப்படுகிறது.

**பொழிப்பு மோனை**

"நல்காய் ஆயினும் நயன்இல செய்யினும்"[7]

முதல் சீரிலும், மூன்றாவது சீரிலும் முதல் எழுத்து ஒன்றி வந்த பொழிப்பு மோனையை இவ்வடி காட்டுகிறது.

**ஒரூஉ மோனை**

"வெண்ணெல் லரிஞர் தண்ணுமை வெரீஇ"[8]

என்ற அடியில் முதல் சீரின் முதல் எழுத்தும், நான்காம் சீரின் முதல் எழுத்தும் ஒன்றி வந்து ஒரூஉ மோனை ஆகிறது.

**கூழை மோனை**

"முழங்குகடன் முழவின் முசியன்ன"[9]

முதல் மூன்று சீர்களின் முதல் எழுத்தும் ஒன்றிவந்து கூழைமோனைக்கு எடுத்துக்காட்டாகிறது.

**மேற்கதுவாய் மோனை**

"மல்ல லாவண மறுகுடன் மடியின்"[10]

என்னும் பரணரின் இவ்வடி, முதல் சீரின் முதல் எழுத்தும், 3-ஆம், 4-ஆம்சீரின் முதல் எழுத்தும் ஒன்றி வந்த மேற்கதுவாய் மோனை ஆகும்.

**கீழ்க்கதுவாய் மோனை**

"கொக்கினுக் கொழிந்த தீம்பழங் கொக்கின்"[11]

முதல் இரண்டு சீர்களின் முதல் எழுத்தும், 4-ஆம் சீரின் முதல் எழுத்தும் ஒன்றி வருவது கீழ்க்கதுவாய் மோனை ஆகும்.

**முற்றுமோனை**

"வீயா விழுப்புகழ் விண்டோய் வியன்கொடை"[12]

என்னும் அடியில், நான்கு சீர்களின் முதல் எழுத்தும் ஒன்றி வந்து முற்றுமோனை ஆகிறது.

பரணரின் பாடல்களில் இவைபோன்று எதுகை, இயைபு, முரண், அளபெடை போன்றவையும், இவற்றின் வகையும் செம்மையுற அமைந்து செய்யுளை அழகுற செய்கின்றன.

**எதுகை**

அடிதோறும் இரண்டாவது எழுத்து ஒன்றிவருவது அடி எதுகை ஆகும்.

"முகைவனப் பேந்திய முற்றா விளமுலைத்

தகைவளர்த் தெடுத்த நகையொடு

பகைவளர்த் திருந்தவிப் பண்பி ராயே"[13]

**இயைபு**

அடிதோறும் இறுதியில் ஓசை ஒன்றி வருவது இயைபு எனப்படும்.

"வாள், வலந்தர **மறுப்பட்டன**

செவ்வானத்து வனப்புப் **போன்றன**

தாள், களங்கொளக் கழல் **பறைந்தன**

கொல்லேற்றின் மருப்புப் **போன்றன**"[14]

என்னும் அடிகள் இயைபுக்குச் சான்றாகும்.

**முரண்**

அடிதோறும் முதற்பகுதியில் பொருளாலோ, சொல்லாலோ முரண்பாடு தோன்றுவது முரண் எனப்படும்.

"தொடுவுழித் தொடுவுழி நீங்கி

விடுவுழி விடுவுழி பரத்த லானே"[15]

"குறுந்தாட் கூதளி யாடிய நெடுவரைப்

பெருந்தேன் கண்ட இருக்கை முடவன்"[16]

**அளபெடை**

அடிதோறும் சொற்கள் அளபெடுத்து வந்து அமைவது அளபெடைத் தொடை ஆகும்.

"உடாஅ போரா வாகுத லறிந்தும்

படாஅ மஞ்ஞைக் கீத்த வெங்கோ

கடாஅ யானைக் கலிமான் பேகன்"[17]

என்னும் அடிகள் அளபெடைக்குச் சான்றாகும்.

**தனிச்சொல்**

"வாள், வலந்தர மறுப்பட்டன

- - - - - - - - - - - - - - - - - -

தாள், களங்கொள - - - - - - - - -

- - - - - - - - - - - - - - - - - - - -

தோல், துவைத்தம்பிற்

- - - - - - - - - - - - - - - - - - - -

மாவே, எறிபறத்தாள் - - - - - - - - - - -"[18]

என்று, பரணர் தம் பாடல்கள் தனிச்சொல் பெற்றும் வந்துள்ளன.

**ஆசிரியப்பா**

பரணர் தம் பாடல்கள் அனைத்தும் ஆசிரியப்பா வகையிலேயே அமைந்துள்ளன.

சங்ககாலத்தில் பல பா வகைகள் இருந்தாலும் சங்ககால இலக்கிய உலகில் தனியாட்சி செய்தது ஆசிரியப்பாவே. அதனால் தான் பிற்காலத்தில் ஆசிரியப்பாவை "அரசப்பா" என்றழைத்தனர்.

> "சங்ககால இலக்கிய உலகில் கவிதையே அரசோச்சியது. கவிதை உலகில் ஆசிரியமே அரசோச்சியது. சங்கப் பாடல்களாக இப்போது கிடைக்கும் 2381 பாடல்களில் இரண்டாயிரத்துக்கு மேற்பட்டவை ஆசிரியப்பாக்களே. ஒரு பாவே ஒரு நூலாகும் தனிச்சிறப்பு ஆசிரியமல்லாமல் வேறு பா பெறவில்லை"[19]

என்று டாக்டர். பூவண்ணன் ஆசிரியப்பாவைச் சிறப்பிக்கிறார்.

இத்தகு சிறப்புப்பெற்ற ஆசிரியப்பா பரணர்தம் பாடலிலும் பீடுநடையோடு அமைந்துள்ளது.

> "அகவல் என்ப தாசிரியப்பாவே"[20]

என்பது ஆசிரியப்பாவின் இலக்கணம்.

சங்க யாப்பான ஆசிரியப்பாவின் அகவல் ஓசையானது அறிவித்தற்கு வேண்டப்பட்டதாகும்.

> "அகவல் ஓசையோடு அளவடித்தாகியும், இயற்சீர் பயின்றும், அயற்சீர் விரவியும், தன்தளை தழுவியும் பிறதளை மயங்கியும் நிரை நடுவாகிய வஞ்சியுரிச்சீர் வாராது அயற்பா அடி மயங்கியும் மயங்காதும், ஐஞ்சீர் அடியால் அருகிவரும் என்றும், நாலெழுத்து முதலாக இருபதெழுத்தின் காறும் உயர்ந்த பதினேழ் நிலமும் பெற்ற நாற்சீரடியால் நடைபெறும்"[21]

என்று அமைந்த ஆசிரியப்பா,

"நேரிசை இணைநிலை மண்டிலம் நிலைப்பெயர்

ஆகுமண் டிலமென் றகவல் நான்கே"[22]

என்று நான்கு வகைகளைக் கொண்டு அமைந்துள்ளது.

பரணரது மொத்தப் பாடல்களில், 6 பாடல்கள், (குறு. 258, குறு. 292, அகம். 6, அகம். 372, அகம். 396, பதிற்று. 50) நிலைமண்டிலமாகவும், 3 பாடல்கள், (புறம். 4, புறம். 348, புறம். 352) இணைக்குறளாகவும் அமைந்துள்ளன. மற்ற அனைத்துப் பாடல்களும் நேரிசை ஆசிரியப்பா வகையில் அமைந்துள்ளன.

## நேரிசை ஆசிரியப்பா

ஆசிரியப்பாவின் பொது இலக்கணம் பெற்று, ஈற்றடியின் மேலையடி முச்சீரடியான் வருவது நேரிசை ஆசிரியப்பா ஆகும்.

"அந்த அடியின் அயலடி சிந்தடி

வந்தன நேரிசை ஆசிரியப்பாவே"[23]

என்பது இதன் இலக்கணம்.

"காதலி உழையள் ஆகவும்

குணக்குந்தோன்று வெள்ளியின் எமக்கும்ஆர் வருமே"[24]

இப்பாடல் நேரிசை ஆசிரியப்பாவிற்குக் காட்டாகும்.

## இணைக்குறள் ஆசிரியப்பா

"இணைக்குறள் இடைபல குறைந்திறல் இயல்பே"[25]

ஈற்றடியின் மேலையடிகள் இரண்டு சீர்களும், ஒருசீரும் குறைந்து இறுதல் இதன் இயல்பாகும்.

"மாக்கடல் நிவந்தெழுதரும்

செஞ்ஞாயிற்றுக் கவின்மாதோ

அனையை ஆகன் மாறே

தாயில் தூவாக் குழவி போல

ஓவாது கூஉம்நின் உடற்றியோர் நாடே"[26]

என்ற பாடல் இவ்வாசிரியப்பாவில் அமைந்துள்ளது.

**நிலைமண்டிலம்**

"ஒத்த அடியின ஆகியும் ஒற்றிற

நிற்பவும் என்னும் நிலைமண் டிலமே"[27]

எல்லா அடிகளும் நாற்சீராய் ஒத்து வருவது இவ்வாசிரியப்பா. சன்றாக,

"நிரைய ஒள்வாள் இளைஞர் பெருமகன்

அழிசி ஆர்க்கா டன்ன விவள்

பழிதீர் மானலந் தொலைதல் கண்டே"[28]

என்னும் பாடலில் எல்லா அடிகளையும் நாற்சீரால் அமைத்துள்ளார் பரணர்.

**சீர்**

ஓசையை, அசைகளைக் கொண்டு சீர்படுத்தும் செய்யுள் உறுப்பே சீர் எனப்படும்.

முப்பது வகையான சீர்களில் அடிப்படையானது, ஓரசைச்சீர், ஈரசைச்சீர், மூவசைச்சீர், நாலசைச்சீர் என நான்கு வகையாகும்.

பரணர் பாடல்களில், ஆசிரியப்பாவிற்கு உரியசீரான ஈரசைச்சீர் மிகுதியாகப் பயின்று வந்துள்ளது. ஆசிரிய உரிச்சீரான இதுவே அடிப்படைச் சீரும் ஆகும். (எ.கா)

நி நே நி நே நே நி நி நி

"பெறு/வ/தியை/யா/தா/யினும்/உறு/வதொன்

றுண்/டுமண்/வா/ழிய/நெஞ்/சே/திண்/டேர்"[29]

நே நி நே நி நே நே நே நே

நேர் நேர் - தேமா ; நிரை நிரை - கருவிளம்

நிரை நேர் - புளிமா ; நேர் நிரை - கூவிளம்

**தளை**

"சீரோடு சீர்தலைப் பெய்வது தளை"[30]

சீர்களை ஓசையால் இணைத்துக் கட்டும் ஒளித்தொடர்ச்சியே தளை எனப்படும். இதன் ஏழு வகையுள் ஆசிரியத்திற்குரிய நேரொன்றாசிரியம், நிரை ஒன்றாசிரியம் ஆகிய இரு தளைகளும் பரணர் பாடல்களில் பெரும்பான்மையாக வந்துள்ளன.

### 1. நேரொன்றாசிரியத் தளை

மா முன் நேர்



தேமா புளிமா

நே நே நே

i) "கை/வள்/ளோ/ரி - - - - - - - -"[31]

தேமா

நி நே நே

ii) "கருங்/கால்/வேம்/பின் - - - - - -"[32]

புளிமா

**2. நிரையொன்றாசிரியத் தளை**

விளம் முன் நிரை

கருவிளம் கூவிளம்

நி நி நி

i) "இறு/முறை/என/வொன் - - - - - - - -"[33]

(கருவிளம்)

நே நி நி

ii) "கோ/டுயர்/நெடு/வரை - - - - - - "[34]

(கூவிளம்)

**3. இயற்சீர் வெண்டளை**

i) மா முன் நிரை

நி நே நி

"மறு/மை/யுல/கத்/து - - - - - - - -"[35]

(புளிமா)

ii) விளம் முன் நிரை

நி நி நே

"எறி/மட/மாற்/கு - - - - - - - -"[36]

(கருவிளம்)

**4. வெண்சீர் வெண்டளை**

காய் முன் நேர்

நி நே நே நே

"கலங்/கின்/று/மா/தவர் - - - - - - - -"[37]

(புளிமாங்காய்)

**5. கலித்தளை**

காய் முன் நிரை

நி நே நே நி

"பிறி/தொன்/று/குறித்/த - - - - - - "[38]

(புளிமாங்காய்)

**6. ஒன்றிய வஞ்சித் தளை**

கனி முன் நிரை

நே நே நி நி

"வண்/டு/வழிப்/பட/ர - - - - - - -"[39]

(தேமாங்கனி)

**7. ஒன்றாத வஞ்சித் தளை**

கனி முன் நேர்

நே நே நி நே

"ஒன்/று/மொழிக்/கோ/சர்- - - - - - - "[40]

(தேமாங்கனி)

பரணர் பாடல்களில் ஏழுவகையான தளைகளும் விரவி வந்துள்ளன.

**அடி**

சீர்களைக் கொண்டு அமையும் யாப்புவகை "அடி" ஆகும். பொதுவாக நான்கு சீர்களைக் கொண்டதனையே அடி என்பர்.

"ஓம்பா வீகையின் வண்மகிழ் சுரந்து"[41]

என்னும் அடி, ஆசிரியப்பாவின் அளவடி (அ) நேரடிக்குச் சான்றாகும். இதுவே அளவான அடியுமாகும்.

# அடிக்குறிப்புகள்

1. கே.இராஜகோபாலாச்சாரியார், இலக்கண விளக்கம், ப.18.
2. அமிதசாகரனார், யாப்பருங்கல விருத்தி, நூற்.1.
3. மேலது, நூற்.33.
4. மேலது, நூற்.34.
5. அகம். 6 (13-15).
6. குறு. 298 (1).
7. நற். 247 (6).
8. புறம். 348 (1).
9. மேலது, 343 (10).
10. அகம். 122 (3).
11. நற். 280 (1).
12. அகம். 135 (11).
13. புறம். 336 (10-12).
14. மேலது, 4 (1-4).
15. குறு. 399 (3-4).
16. மேலது, 60 (1-2).
17. புறம். 141 (10-12).
18. புறம். 4 (1,3,5,7).
19. டாக்டர். பூவண்ணன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.57.

20. அமிதசாகரனார், யாப்பருங்கல விருத்தி, நூற்.16.

21. மேலது, நூற்.70.

22. மேலது, நூற்.71.

23. மேலது, நூற்.71.

24. நற். 356 (8-9).

25. அமிதசாகரனார், யாப்பருங்கல விருத்தி, நூற். 72.

26. புறம். 4 (17-18).

27. அமிதசாகரனார், யாப்பருங்கல விருத்தி, நூற்.74.

28. குறு. 258 (6-8).

29. மேலது, 199 (1-2).

30. அமிதசாகரனார், யாப்பருங்கல விருத்தி, நூற்.17.

31. குறு. 199 (3).

32. மேலது, 24 (1).

33. மேலது, 199 (7).

34. நற். 247 (5).

35. குறு. 119 (8).

36. நற். 6 (8).

37. அகம். 135 (14).

38. குறு. 298 (8).

39. அகம். 198 (8).

40. மேலது, 196 (10).

41. பதிற்று. 42 (13).

# முடிவுரை

இலக்கியப் பரப்பில் இன்றளவும் சிறப்பாகப் பேசப்பெறும் சங்க இலக்கியம் ஒரு பேரிலக்கியமாகும். இச்சங்க இலக்கியப் பாடல்களை இன்றும் எண்ணற்ற அறிஞர்கள் தாம் கூறும் கருத்துகளுக்கு உறுதுணையாக எடுத்தாளுகின்றனர்.

ஆய்வேட்டின் முதல் இயலான 'வரலாற்றுக் குறிப்புகள்' என்பதன்கண் சேர சோழ பாண்டியர்களுள் எழுவரையும், கடையெழு வள்ளல்கள் (பாரியைத் தவிர) அறுவரையும், குறுநில மன்னர்கள் இருபத்து ஐந்து பேரையும், ஆட்டனத்தி, ஆதிமந்தி, மருதி, அன்னி மிஞிலி போன்ற சிறப்பு மிக்கவர்களையும், கோசர், வேளிர், கொங்கர் போன்றோரையும் பரணர் பாடியுள்ள திறம் ஆராயப்பட்டுள்ளது.

மன்னர்களுக்கு உரிமையுடையனவான நகரங்களும், இமயமலை முதலான மலைகளும், காவிரியாறும், வாரி இறைத்துப் புகழ்பெற்ற வள்ளல்கள் பற்றியும், அவர்தம் கொடைச் சிறப்பு ஆகியனவும் இவ்வியலில் ஆராயப்பட்டு உள்ளன.

'இலக்கியக் கூறுகள்' என்னும் இரண்டாம் இயலில் உவமையின் இன்றியமையாமை, உவமைகளைக் கையாண்டுள்ள திறம், பரணர்தம் உள்ளத்துப் பிறந்த கற்பனைகள், இயற்கையைக் குறித்தும் தலைவியைப் பற்றியும் வரும் வருணனைகள், மனித மனத்தில் உண்டாகும் உணர்ச்சிகள் ஆகியவை பரணர் பாடல்களில் பெற்றுள்ள சிறப்பிடமும் இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன.

பரணர்தம் பாடல்கள் சொற்பொருள் நயங்களும், தொடை நயங்களும் பெற்றுச் சொல்லழகினை உண்டாக்கி உவகை தருவதை 'யாப்பமைதி' என்னும் மூன்றாம் இயலில் ஆராயப்பட்டுள்ளது.

# துணைநூற்பட்டியல்


1. அமிதசாகரனார் — யாப்பருங்கல விருத்தி,
கழக வெளியீடு,
சென்னை,
முதற்பதிப்பு-மார்ச்-1973.

2. அரங்கசாமி, பொ.அ.துரை. — சங்ககாலச் சிறப்புப் பெயர்கள்,
(இலக்கியச் சிறப்புப் பெயர்களும் குடிபற்றிய சிறப்புப் பெயர்களும்)
பாரிநிலையம்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு - ஜீலை - 1980.

3. இராமலிங்கத்தம்பிரான் (உ.ஆ.), — தண்டியலங்காரம்,
கழக வெளியீடு,
சென்னை,
21-ஆம் பதிப்பு-ஆகஸ்டு-1998.

4. இராமலிங்கம், மா. — புதிய உரைநடை,
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை,
முதற்பதிப்பு - 1978.

5. இராஜகோபாலாச்சாரியார், கே. — இலக்கண விளக்கம் (அணியியல்),
கலா நிலையம்,
சென்னை,
4-ஆம் பதிப்பு-ஜீலை-1982.

6. இளம்பூரணர் (உ..ஆ.), தொல்காப்பியம்,
கழக வெளியீடு,
திருநெல்வேலி,
4-ஆம் பதிப்பு-ஜீலை-1967.

7. கதிர் மகாதேவன் ஒப்பிலக்கிய நோக்கில் சங்ககாலம்,
வெளியீடு - அறிஞர் அண்ணா நகர்,
மதுரை-6,
நான்காம் பதிப்பு - டிசம்பர் - 2002.

8. கந்தசாமி, சோ.ந. குறுந்தொகைத் திறனாய்வு,
மணிவாசகர் பதிப்பகம்,
சிதம்பரம், முதற்பதிப்பு - 1986.

9. கைலாசபதி, க. இலக்கியமும் திறனாய்வும்,
சென்னைப் பல்கலைக் கழகம்,
சென்னை,
முதற்பதிப்பு - 1981.

10. சண்முகம், தா.ஏ., உளநலவியல்,
தமிழ் வெளியீட்டுக் கழகம்,
தமிழக அரசு,
மார்ச் - 1970.

11. சாமி, பி.எல்., சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம்,
கழக வெளியீடு,
சென்னை,
மறுபதிப்பு - 1982.

12. சாரங்கபாணி, இரா. இயற்கை விருந்து,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு - 1991.

13. சிங்காரவடிவேலன், அர. சங்க இலக்கிய உவமைகள்,
பழனியப்பன் பதிப்பகம்,
தேவகோட்டை,
முதற்பதிப்பு - டிசம்பர் - 1986.

14. சிவப்பிரகாச முதலியார் அபிதான சிந்தாமணி,
ஏசியன் எஜூகேஷனல் சர்வீசஸ்,
புதுடெல்லி,
இரண்டாம் பதிப்பு - 1988.

15. சோமசுந்தரனார் (உ.ஆ.), பொ.வே. பத்துப்பாட்டு உரையுடன் (முதற்பகுதி),
கழக வெளியீடு,
சென்னை,
மறுபதிப்பு - செப்டம்பர் - 1960.

17. ,, ,, ,, சிலப்பதிகாரம் மூலமும் உரையும்,
கழக வெளியீடு,
சென்னை,
மறுபதிப்பு - ஜீன் - 1968.

18. ,, ,, ,, அகநானூறு மூலமும் உரையும்,
கழக வெளியீடு,
சென்னை,
மறுபதிப்பு - மே - 1970.

19. „ „ „ குறுந்தொகை மூலமும் உரையும்,
கழக வெளியீடு,
திருநெல்வேலி,
மறுபதிப்பு - பிப்ரவரி - 1972.

20. ஞானமூர்த்தி, தா.ஏ. இலக்கியத் திறனாய்வியல்,
யாழ் வெளியீடு,
சென்னை,
மறுபதிப்பு - ஜீலை - 2002.

21. தமிழண்ணல் சங்க இலக்கிய ஒப்பீடு,
சோலை நூலக வெளியீடு,
மதுரை,
மூன்றாம் பதிப்பு - டிசம்பர் - 1985.

22. துரைசாமிப்பிள்ளை, ஔவை.சு. புறநானூறு மூலமும் உரையும்,
கழக வெளியீடு,
திருநெல்வேலி,
மறுபதிப்பு - ஏப்ரல் - 1960.

23. „ „ „ „ பதிற்றுப்பத்து மூலமும் உரையும்,
கழக வெளியீடு,
திருநெல்வேலி,
மறுபதிப்பு - ஜீலை - 1968.

24. பகவதி, கே. — இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், தொகுதி-2,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை,
முதற்பதிப்பு - அக்டோபர் - 1984.

25. பரிமேலழகர், (உ.ஆ.), — திருக்குறள்,
வெளியீடு - வை.மு. நரசிம்மன்,
வை.மு.கோபாலகிருஷ்ணமாசார்யார் கம்பெனி,
சென்னை,
நான்காம் பதிப்பு - மே - 1965.

26. பூவண்ணன் — தமிழ் இலக்கிய வரலாறு,
கழக வெளியீடு,
சென்னை,
முதற்பதிப்பு - 1998.

27. மணி, பெ.சு. — சங்ககால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும்,
மெய்யப்பன் தமிழாய்வகம்,
சிதம்பரம்,
இரண்டாம் பதிப்பு - மே - 1986.

28. வடிவேலன், இரா. — சங்ககாலக் கொங்குநாடு,
அருணோதயம் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு - மே - 2001.

29. வரதராசன், மு. நற்றிணைச் செல்வம்,
பாரிநிலையம்,
சென்னை,
முதற்பதிப்பு - நவம்பர் - 1958.

30. „ „ „ மாதவி,
பாரிநிலையம்,
சென்னை,
பதிப்பு - 1976.

31. „ „ „ இலக்கியத் திறன்,
பாரிநிலையம்,
சென்னை,
மறுபதிப்பு - 1996.

32. „ „ „ தமிழ் இலக்கிய வரலாறு,
சாகித்ய அகாதெமி,
புதுடெல்லி,
12-ஆம் பதிப்பு - 1999.

33. வேங்கடராமன் (உ.ஆ.), எச். நற்றிணை மூலமும் உரையும்,
டாக்டர்.உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம்,
சென்னை,
மறுபதிப்பு - 1989.

34. வைரமுத்து — வில்லோடு வா நிலவே,
சூர்யா லிட்டரேச்சர் (பி) லிமிடெட்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு - டிசம்பர் - 1995.

35. ஸ்ரீ, பி. — வீரத் தமிழகம்,
அமுத நிலையம் பிரைவேட் லிமிடெட்,
சென்னை,
முதற்பதிப்பு - ஜீன் - 1958.

**கட்டுரைகள்**

36. பாலகிருஷ்ணன், மு. — தமிழ் ஆராய்ச்சி வரலாறு, (முதல் பகுதி),
பச்சையப்பன் ஆய்வரங்கம்,
சென்னை,
முதற்பதிப்பு - 1998.